# அமிர்த குணபோதினி

(இதுவே முன்பு ஆநந்த குணபோதினி.)

## மூன்ருவது கமலத்தின் விஷய அட்டவணே.

☞ அடியிற்கண்ட இலக்கங்கள் பக்கங்களைக் காட்டுகின்றன.





ஓம் பரப்பிரம்மணே நம:

# அமிர்தகுணபோதினி

## AMIRTHA GUNA BODHINI

*(The largest circulated High Class Tamil monthly in Southern India.)*

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கி, ஆநந்தத்தைத் தரவல்லதான அநுபவ விநோத ஞான கலா விலாஸங்கள் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

## மூன்றாவது கமலம்

## Vol—3

**April 1928—March 1929**

**விபவ வருஷ வால்யம்**

சித்திரைமீ முதல் பங்குனிமீ வரையில்.

(680-பக்கங்களுக்கு மேல் கொண்டது.)

**"All our Knowledge is based upon Experience,"—Vevekananda.**


T. இராஜகோபால் முதலியார்,
புரொப்ரைட்டர், "அமிர்த குணபோதினி" ஆபீஸ்,
நெ. 302, தங்கசாலைத் தெரு, சென்னை.

*1929*




[காலிகோ பைண்டு ரூ. 1-6-0.

பைண்டு செய்த 1, 2—வால்யங்கள் தனித்தனி விலை ரூ. 1-6-0.
பைண்டு செய்யாத தனித்தனி சஞ்சிகைகள் 12-க்கும் விலை ரூபா ஒன்றே.

 பிரதிமாத ஸஞ்சிகையின் கடைசியிலும் விபவ வருஷத்திய பஞ்சாங்கம் 12-மாதங்கட்கும் தொடர்ந்து பிரசுரிக்கப்பட்டுள்ளன.

# மூன்றாவது கமலத்திலுள்ள

## அநுபவ ஞானத் துணுக்குகளின் அட்டவணை.

☞ இம்மாதிரியான அநுபவ ஞானங்களையும், லோக ரகசியங்களையும், பட்டுத் தெளிந்த உண்மைகளையும், முன்னெச்சரிக்கைகளையும் "**அமிர்த குணபோதினி**"யிலன்றி வேறு எந்தப் பத்திரிகையிலும் நூலிலும் காண இயலா. இவை ஒரு தனிச்சுவையும், மதுரமும், அழகுங்கொண்டு "**அமிர்த குணபோதினி**"க்கென்றே அமைந்தவையாகும்.

 இந்த இரு அட்டவணைகளிலும் அடங்காத எத்தனையோ அநுபவக் குறிப்புகளைப் பக்கங்களுக்கு இடையிடையே அழகிய வளைவுக்குள் காணலாம். அன்றியும் பிரதி பக்கங்களிலும் அடிக்குறிப்புகளாக எண்ணற்ற அநுபவ ஞானங்களும் லோக ரகசியங்களும் உதகரிக்கப் பட்டுள்ளன. அவற்றையெல்லாம் அவ்வவ் விடங்களில் வாசித்துணர்ந்து கொள்ளுமாறு கோருகிறோம். இதுபோன்ற நல் விஷயங்கள் நிறைந்து வெளிவரும் இந்த "அமிர்த குணபோதினி'ப் பத்திரிகையை அன்புடன் மேன்மேலும் அபிவிர்த்தி செய்து என்ஞான்றும் ஆதரித்து வருமாறு பிரார்த்திக்கிறோம்.

# Miss Miller.

## ராணி, ஸ்ரீமதி சர்மிஷ்டா தேவி



(" தமிழ் நாடு ")

(39-ம் பக்கமும் 56-ம் பக்கமும் பார்க்க.)

☞ இந்த ஐரோப்பியப் பெண்மணி அமெரிக்காவிலே பிறந்தவர். இவருக்கு மிஸ், மில்லர் என்று பெயர். இவர் ஹிந்துவாகிய இந்தூர் மன்னரைக் காதலித்து, சங்கராச்சாரிய ஸ்வாமிகளால் ஹிந்து மதத்தில் பிராயச் சித்தம் செய்து சேர்க்கப்பட்டு "சர்மிஷ்டா தேவி" என்ற புதுப் பெயருடன் இந்தூர் அரசரை விவாகம் செய்துகொண்டார். தமது காதலை விவாகத்தால் சிறப்பித்துக்கொண்டவராவார் இவர்.

# சந்தாதாரர்களுக்கு அறிவிப்பு.

## சந்தாதாரரைச் சேர்த்துக் கொடுத்தால் சரியான லாபமடையலாம்

1. ஒரு புதிய சந்தாதாரரைச் சேர்த்து விலாசத்துடன் சந்தாவையும் அனுப்புவோருக்கு புதிதாக இபற்றப்பெற்ற 'விபவ' நாம ஸம்வத்ஸர ஆநந்த குணபோதினி அற்புத சர்வமுகூர்த்த திருக்கணித பஞ்சாங்கம் தபாற் செலவுடன் இனும்! 96 பக்கங்களுடையது!! இதன் விலை அணு 4.

2. மூன்று சந்தா சேர்த்தால் எமது "ஆநந்த குணபோதினி" பத்திராசிரியரவர்கள் இயற்றிய "பதினேட்டாம் பாஷை அல்லது அபூர்வ தமிழ் பரிபாஷை" என்னும் புத்தகம் இனும்! இப்புத்தகம் இதுகாறும் வெளிவராத தமிழ் நூதனம். அபூர்வ ரகசிய பாஷை. 15-நிமிஷங்களில் கற்றுக்கொண்டு பேச ஆரம்பித்துவிடலாம். பேசினல் ஒருவரும் பக்கத்திலிருந்து அறிந்துகொள்ள முடியாது விலை அணு 8.

3. ஐந்து புதிய சந்தாதாரர்களைச் சேர்த்து விலாசத்துடன் சந்தாவையும் முன்னதாக அனுப்புவோருக்கு அனேக மாதங்களாக எதிர் பார்க்கப்பட்டு தற்சமயம் வெளி வந்துள்ளதும், முத்துப் போன்ற எழுத்தில் அச்சிடப்பட்டதுமான மாணிக்கவல்லி அல்லது ஓர் மாதின் மர்மம் என்னும் அரிய புத்தகம் இனமே!!! இதன் விலை ரூ. 1-0-0.

ஓம் பரப்பிரம்மணே நம:

# ஆநந்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கி, ஆநந்தத்தைத் தரவல்லதான அநுபவ விநோத ஞான கலா விலாஸங்கள் நிறைந்திலங்கும் உயரிய செந்தமிழ் மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம் - எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

“ எண்ணிய எண்ணியாங் கெய்துப ; எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.” (திருக்குறள்.)

| கமலம் 3. | சென்னை: விபவஸு சித்திரைமீ 1உ | இதழ்-25. |
| --- | --- | --- |
| Vol. 3. | 1928-ம்ஸு எப்பிரல்மீ 14உ | No. 25. |






கடற்காட்சி, வான்காட்சி, சார்வரை சூழ்காட்சி,
உடற்காட்சி, யவ்வுட லோண்சூற் — படற்காட்சி,
உய்த்துய்த் துணர்ந்தக்கண் ‘ஓரிறைவ னுண்டென்னும்’
மெய்த்தன்மை நெஞ்சின் மிகும்.

“ வந்தே மாதரம் ” என்று ஸ்தோத்திரம் செய்வது வங்க தேச வாசிகளின் வழக்கம். அத்தேசத்தார் சக்தியே பரப்பிரம்மமென்று நிச்சயித்து, ஸதா காலமும் ஜகதம்பிகையாகிய காளியை ஸ்தோத்திரம் செய்கிறார்கள். தசராப் பண்டிகை காலத்தில் வீடுகள்தோறும் அம்பிகையை ஆராதித்து அகமகிழ்ந்த ஸங்கதியை வங்கதேசிகள் ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு ஸந்தோஷப்படுவர். நமது பக்கத்திலும் துர்க்கை, லக்ஷ்மி, ஸரஸ்வதி ஆகிய தேவிகளை யாராதிப்பது ஸம்பிரதாயமாயினும், வட நாட்டினர் நம்மிலும் விமரிசையாய்க் கொண்டாடுகின்றனர். சாரதாவின் கிருபையிருந்தால்தான் தெளிந்த புத்தியுண்டாகும். கௌரியின் அருள் இருந்தால்தான் க்ஷேமம் எற்படும். லக்ஷ்மியின் கடாக்ஷம் உண்டானால் ஐசுவரியம் பெருகும். கல்வியும், செல்வமும், க்ஷேமமும், செல்வாக்கும் மனுஷ்ய ஜீவியத்திற்கு ஹிதத்தைப் புரிபவை. தேவீ பூஜை பரசுகத்தை நல்க வல்லது. ஆகலின் இந்த விபவ வருஷத்தில் ஸர்வ க்ஷேமங்களையும் அடைந்து இன்ப வாழ்வு எய்துதற்காக நாம் ஜகதீசுவரியை ஸதா ஆராதிக்கக் கடவோம்.

---

☞ இப்பத்திரிகையின் வருஷ சந்தாவான ரூபாய் ஒன்றை உடனே முன்பணமாகச் செலுத்துவோர்க்குக் கிடைக்கும் லாபங்களை இப்பத்திரிகையை முற்றிலும் படிப்பதால் அறிந்து கொள்ளலாம்.

"முக்திக்கு வித்து எது?" நிராசையே. அதாவது ஆசையில்லாதிருத்தலாம். ஆசை உண்டாகாமைக்குக் காரணம் பொறுமைக்குணமாம். பொறுமையானது பாபம் செய்யாதவர்க்குரிய குணம். மனுஷ்யன் முதலாவது தீத்தொழிலை விட்டுவிடவேண்டும். அதன் பிறகு பொறுமையைக் கொள்ளவேண்டும். மூன்றாவதாகப் பற்றை யொழிக்க வேண்டும். இவைகளான பின் மோக்ஷத்தில் இச்சையுள்ளவனாய் ஆத்ம ஸ்வரூபத்தை யறிய வேண்டும். இப்படியின்றி பாப கிருத்யங்களைச் செய்துகொண்டே யிருந்தால் ஒரு நாளும் பொறுமையுண்டாகாது. பொறுமை யுண்டாகாவிட்டால் ஆசை யடங்காது. ஆசை அடங்காவிட்டால் மோக்ஷத்தில் இச்சை ஜனிக்காது. மோக்ஷத்தில் இச்சை ஏற்படாவிட்டால் ஆத்ம ஸ்வரூபத்தை யறிய முடியாது.

***

"மனம்போல மாங்கல்யம்" என்பதுபோல, அவரவரது மனோநிலைக்குத் தக்கபடி குணங்கள். குணங்களுக்கு ஏற்றவாறு செயல்கள். எவராலும் விரும்பத்தக்க குணங்களைப் பொருந்தியவர்கள் நடக்கும் மாதிரி ஒருவகை. வெறுக்கத்தக்க தன்மைகளைக் கொண்டோரின் ஸ்வபாவம் வேறொரு வகை. ஸர்ப்பம், எலி, தேள் முதலிய விஷஜந்துக்களும் பூச்சி புழுக்களும் வெறுக்கத் தக்கனவாதலின், பூமிக்குள் புற்று, பொந்து முதலியவற்றை யுண்டாக்கிக்கொண்டு வஸிக்கின்றன. பறவைகள் ஹிம்ஸை யென்பதைக் கருதாமல் ஸுகமாய் நிர்மலமான ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்றன. இதைப்போல் துஷ்ட மனிதர்கள் தங்களுடைய விஷமயமான ஹிருதயத்தைப் பிறர் அறியாதபடி இரகஸ்யமாய்க்கூடி துராலோசனை செய்கின்றனர். ஸுஹிருதயஸ்தர்கள் எப்போதும் நிர்மல சித்தத்தோடு உத்ஸாகமாய்க் காலங்கழிக்கிறார்கள். புற்றிலும் பொந்திலுமுள்ள விஷ ஜந்துக்கள் பறவைகளைத் துன்பப்படுத்த முடியாதது போல், ஸாதுக்களை துஷ்டர்கள் ஹிம்ஸிக்க முடியாது. அவர்களுடைய தீய பிரயத்நமெல்லாம் வியர்த்தமாகும். ஆகாசத்திலெறிந்த கல் மேலே போக முடியாமல் இரட்டிப்பு வேகத்துடன் கீழே விழுவது போலும், பிறர் மீது உமிழ்ந்த எச்சில் காற்றடித்துத் தன் மீது விழுந்து அசுத்தப்படுத்துவதுபோலும், விஷமித்த மனத்தினர் செய்யும் துஷ்டப் பிரயத்நங்களெல்லாம் அவர்கட்கே துன்பத்தை விளைக்கும்.

***

"மதம் கெட்டால் பதம் கெடும்" என்பது பழமொழி. மதத்தைப் பற்றிய அறிவு இல்லாதவரை மனிதன் திருந்தமாட்டான். மதமே ஒருவனைப் பதப்படுத்துவது. அந்ய மதஸ்தர்களின் வினாக்களுக்குத் தகுந்த விடையளிக்கும்படி தங்கள் மக்கட்கு மத கிரந்தங்களைக் கற்பிக்க வேண்டும். இது ஸகல மதஸ்தர்கட்கும் கூறிய குறிப்பு. காளியின் கோர ரூபத்தைக் கண்டு அந்ய மதஸ்தர் உங்கள் தேவதை இப்படிக் கோர ரூபத்தைக் கொண்டிருப்பதால் நீங்கள் நாகரீக மற்றவர்களென்று சொல்லத் தடையில்லை யெனில். அவர்கட்குப் பதில் சொல்லத் தெரியாமல் நமது பிள்ளைகள் விழிக்கிறார்கள். காளியின் கோர ரூபத்தைக் கண்டு பாபராசிகள் பயந்தோடும். கெட்ட எண்ணங்கள் அவ்வம்பிகையைத் தரிசித்த க்ஷணம் மறைந்துபோம்.

---

அருகில் இருக்கும் பற்களே சில சமயங்களில் நாக்கைக் கடித்து விடும், உன்னைச் சூழ நிற்பவரின் சங்கதியும் இவ்விதமே.

எப்போதும் புண்ய கர்மத்தையே செய்துகொண்டிருக்க வேண்டுமென்றும், இல்லையேல் ஜகன் மாதாவின் கோபத்துக்கிலக்காக நேருமென்றும், மகா காளியின் பயங்கரரூபம் நம்மை எச்சரித்துக்கொண்டிருக்கிறது. நமது சத்துருக்களை ஹதம் செய்வதற்காக அகில லோக நாயகி இவ்வுருவத்தோடிருக்கிறாளேயன்றி வேறல்ல. பிரஜைகளைக் காப்பாற்றும் அரசன் முறுக்கிவிட்ட மீசைகளையும்பட்டாக்கத்தியையும் வைத்துக்கொண்டிருக்கிறானே, அவனிடம் நமக்குப் பயம் பக்தி விசுவாஸம் உண்டாகிறதன்றோ? ஆயுத பாணியாகிய அரசனைக் கோரரூப னென்று நினைக்கிறோமோ? இல்லை, இல்லை. அதே அரசன் ரணரங்கத்தை விட்டு வந்தவுடன் சிரித்த முகத்தோடிருப்பதுபோல், மகா காளி நம்முடைய பாபராசிகளை விரட்டியபின் அழகிய அம்பிகையாக விளங்குகிறாள். இவ்வுண்மையைச் சிறுவர்கள் கருத்திற் கொள்வார்களாக.

***

"ஞானமே பிரதானம்" அன்னத்தை அபேக்ஷிப்பவன் அரிசியை மட்டும் வைத்துக் கொண்டிருந்தால் பயனில்லை. அரிசி, விறகு, பாத்திரம், அடுப்பு இவைகளிருந்தாலும் போதா. முக்கியமாய் இருக்கவேண்டியது நெருப்பு. அக்கினி இல்லையேல் அரிசி அன்னமாகாது. அதுபோல் முக்தியடைவதற்கு ஸத்கருமம், பகவத் பக்தி இவைகள் மட்டுமிருந்தால் போதா. ஞானம் முக்கியம். அதாவது இன்னது நித்யம், இன்னது அநித்யம், நித்ய வஸ்துவின் தன்மை இப்படிப்பட்டது என்றறிந்தால் தான் என்றும் நிலைத்த ஆநந்த முண்டாகும். தன்னுடைய நிஜஸ்வரூபத்தைத் தான் அறியாதவரை அஞ்ஞானியேயாவன். புலித்தோலைப் போர்த்துக் கொண்டு ஒரு கழுதை நிர்ப்பயமாய் வயல்களிலெல்லாம் மேய்ந்து பயிர்களை நாசமாக்கி வந்தது. அதை நிஜமான புலியென்று பிரமித்துக் குடியானவன் அருகே வரப் பயந்து ஓடினான். பின்னர் ஓரிரவு அவன் புலி பயிரை மேய்வதெப்படியென்றறியுமாறு ஒரு புதரில் பதுங்கி யிருந்த போது புலித்தோல் போர்த்த கழுதை கத்தியது. உடனே அதன் குரலால் அது கழுதைதானென்று நிச்சயித்துத் தடியால் நையப் புடைத்து ஓட்டினான். இப்படிச் செய்யாமல் அதாவது கழுதையின் நிஜஸ்வரூபத்தை யறியாமலிருந்தால் குடியானவனுடைய பீதி ஒருபோதும் ஒழியாது. அவனுடைய நிலமும் பயிர் விளைந்து பயனைத் தாராது. ஆகவே, ஒவ்வொரு வஸ்துவின் தன்மையையும் உய்த்துணர வேண்டும்.

***

"தன்னைத் தான் அறிதல்" தான் முக்கியம். தன்னுடைய ஸ்வரூபத்தை உண்மையாய் அறியாத குற்றத்தால் உலகத்தில் பலவித துன்பங்களையும் போலிச் சுகங்களையும் மனுஷ்யன் அனுபவிக்கிறான். சரீரம், ஆத்மா ஆகிய இரண்டில் சரீரம் அழிந்து போவது, ஆத்மா நித்யமானது என்று வாயாற் சொன்னால் பயன்படுகிறதில்லை. நம்பினாலும் நலமுண்டாகிறதில்லை. நம்மை விட்டுப் பிரமை ஒழிகிறதில்லை. நேற்றிரவு நாம் தூங்கும்போது நமது பிரக்ஞை எங்கு போயிற்று? அதற்காகக் காலையில் எழுந்ததும் வியஸன மடைந்தோமா? சிறு வயதில் நமக்கிருந்த ஸௌகுமாரமான சரீரம் எங்கே? எப்படியோ மாறிப்போயிற்றே! அதற்காக வருந்தியவர் யார்? இப்போ

திருடும்போதிருக்கும் சந்தோஷம் அகப்பட்டுக்கொண்டால் தெரியும்?

துள்ள சரீரத்தைக் கண்டு திருப்தி யடைகிறோம். இனி கிழச் சரீரம் வந்தாற்றாலும் அதற்காகவும் நாம் வியஸனமடையப் போகிறதில்லை. அந்த சரீரம் கிடைத்ததே யென்று திருப்தி யடைவோம். இவைகளை யாராய்ந்து பார்த்தால், ஒவ்வொரு நிலைமைக்கும் தக்கபடி அப்போதப்போது கிடைக்கும் சரீரங்களை யபிமானித்து ஆநந்த மடைந்து, என்றும் மாறாமல் அழியாம லிருக்கும் ஆத்மாவை மறந்துபோகிறோம். இது அவிவேகமன்றோ ? இப்படி வீணான அபிமானத்தை அநித்யமான வஸ்துக்களில் வைத்து அவைகளிருக்கும் வரை ஸந்தோஷமும், போன பின் வியஸனமுமடைந்து வருந்துவதை விட, நமது நிஜ ஸ்வரூபமாகிய ஆத்மாவின் தன்மையை யறிந்து அதனால் உண்டாகும் நித்தியாநந்தத்தை யனுபவிப்பது எத்தனை சுககரம் ? இவ்வறிவு நமக்கு வித்திக்குமாறு நாம் பரமேசுவரனைத் தியானிப்போமாக.

## எவ்வாறு இருப்பின் அறிவுடையோனவன் ?

(1) " செய்கையில் செயலின்மையையும்,
(2) செயலின்மையில் செய்கையையும்
எவன் காணுகின்றானோ அவனே மனிதரில் அறிவுடையோன் " என்று " கீதை " கூறுகின்றது.

(1) " செய்கையில் செயலின்மை "யாவது :— தான் செய்யும் ஒரு செய்கையில் அதனைப் பூர்ணமாய் நிறைவேற்றி வைக்கும் தன்மை இறைவனுடைய செயலிலேயே இருக்கிறதென்றும், தன் செயலால் ஆவது ஒன்றுமில்லை யென்றும், இவ்வாறாகத் தன் ' செயலின்மை 'யைத் தெளிவாக உணர்ந்து கொள்ளுதலாம். இது ஒருவித அறிவு ஆகும்.

(2) " செயலின்மையில் செய்கை "யாவது :— எதனையும் செய்யத் தான் எண்ணாதிருக்கையிலேயே, ஒரு ' செய்கை 'யைச் செய்யும்படி அதற்கானசிந்தனைக் குறிப்பைத் தன் உள்ளத்திலே திடீரென்றும் காணப்பெற்று, அந்தச் சிந்தனையினது ஒளியின் வழியிலே தன் விழிகளை நாட்டிச் ' செய்கை ' செய்யத் தொடங்குவதாம். இவ்விதம் தன் 'செயல்' ஏதும் இல்லாதிருக்கையிலேயே 'செய்கை' தோன்றி, அதனால் தான் ஏவப்படுவதை ஈச்வர நியமனம் இது என்று கொண்டு தெளிவது மற்றொருவித அறிவாகும்.

இந்த இருவிதமான அறிவையும் பெற்றோன் எவனோ அவன் ' அறிவுடையோனவன் ' என்பது மேற் சொல்லிய ' கீதை 'யின் பொருள்.

உண்மையில் உதவி செய்ய விரும்புகிறவன் கேட்கிறவரையில் காத்திருக்கமாட்டான். மனமில்லாதவனைக் கேட்பினும் சாக்கு சொல்வான்.

அதிகமாகவினை ; குறைவாகப்பேசு ; இன்னமும் குறைவாக எழுது.

பணக்காரனைக்கண்டு பயந்துவிடாதே. உன் வீட்டுக்கு நீயே ராஜா.

ஆநந்தகுணபோதினி

விபவஹூ சித்திரைமீ 1உ

# நமது மூன்றாவது வருடம்

எதிலும் "செய்கைத் தலைமை" அதாவது ஒன்றைச் 'செய்' என்று விதிக்கும் எஜமானத்துவம் கருணையங்கடலான கடவுளினுடையதே. ஆதிமூலமாய், எங்கும் தானாய் விளங்கும் எம்பெருமான் சித்தமுவந்து ஏவிய ஆக்ஞையின் வழியிலே உலகத்து உயிர்கள் தத்தம் தொழிலைச் செய்யத் தொடங்குகின்றன. "விதிக்கப்பட்ட தொழிலை நீ செய்" என்று 'கீதை' உபதேசிக்கின்றது. "செய்கைத் தலைமை" யுடையவராகிய பகவான் நமக்கு இட்ட பணியாகிய "ஆநந்த குணபோதினி" யின் ஆசிரியத்துவத்தை நமது சக்திக்கு இயன்றவரையிலும் மனஸ்பூர்வமாகச் செய்து வருகின்றோம். தெய்வ கிருபையாலும், பெரியோர்களின் ஆசியாலும், சந்தா நேயர்களின் அளவற்ற அபிமானத்தாலும் "ஆநந்த குணபோதினி" யின் இருவருடங்களும் பூர்த்தி பெற்று, இன்றுமுதல் மூன்றாவது ஆண்டு ஆரம்பமாகின்றது. இப்புது வருஷத்தில் நமது "ஆநந்த குணபோதினி" மேன்மேலும் செழித்தோங்குமாறு நாமெல்லோரும் ஏகமனதாய் ஸர்வேசுவரனைப் பிரார்த்திக்கக்கடவோம்.

"ஆநந்த குணபோதினி"ப் பத்திரிகையானது "ஆநந்த கதாகல்பகம்" என்ற அநுபவ ஞான நூலின் சாயலாக நடத்தப்படுகின்றது. "ஆநந்த கதா கல்பகம்" என்பது 1913-ம் வருஷ முதற்கொண்டு மூன்று வருடங்களுக்கு ஒரு வால்யமாக வெளிவந்து கொண்டிருக்கும் ஓர் அரிய நாவல் பிரபந்தமாகும். அதன் முதல் வால்யம் 1913-ம் வருஷத்தில் பிரசுரமாயிற்று. இது பதினெட்டு வால்யங்கள் கொண்ட ஒரு பெரிய நூல். இதுவரையில் ஐந்து வால்யங்கள் வெளிவந்துள்ளன. "ஆநந்த கதா கல்பக"த்தில் உள்ள "விகட மாமா" என்ற விகடப் பகுதியை "ஆநந்த குணபோதினி" யில் "விகடப் பிரதாபன்" என்று மாற்றியும், இன்னும் "ஆநந்த கதா கல்பக"த்தில் என்னென்ன விசேஷ அம்ஸங்கள் சிறந்து விளங்குகின்றனவோ அவற்றை யெல்லாம் "ஆநந்த

அகழியை நிரப்பலாம். ஆசையை நிரப்பமுடியுமா?

குணபோதினி" யில் காணும்படி திருத்தியும்—இவ்வாருக "ஆநந்த கதா கல்பக" த்தின் முழுச் சாயலேயும் "ஆநந்த குணபோதினி"யில் அமைப்பித்து, அதற்குத் தகுந்த விதமாய்ப் பிரதி தடவையும் விஷயங்களைத் தேர்ந்தெடுத்து எழுதப்பட்டு வருகின்றது.

இவ்வாருக "ஆநந்த கதா கல்பக"த்தின் சாயலாய் நடத்துவதற்கு ஒரு அறிகுறியாய் இருப்பதற்காக "ஆநந்த கதா கல்பக" த்தின் முதற்பதம் ஆகிய "ஆநந்த" என்ற பதத்தை ஏற்கெனவே ஸ்ரீமான் தி. இராஜகோபால் முதலியாரவர்களின் மைத்துனரால் பிரசுரமாகிப் பிறகு நின்றுவிட்ட "குணபோதினி"ப் பத்திரிகையின் பெயருக்கு முன்பு சேர்க்கப்பட்டு, "ஆநந்த குணபோதினி" என்று இப்பத்திரிகைக்குப் பெயரிடலானது.

"ஆநந்த குணபோதினி" என்ற கம்பீரமான நாமத்தால் சிறப்புற்ற இப்பத்திரிகையானது அநந்த குண போதினியாய், ஆநந்த கதா போதினியாய், ஆநந்த ரஸபோதினியாய், ஆநந்த விகட போதினியாய், ஆநந்த சுகிர்த போதினியாய், ஆநந்த ஞான போதினியாய், ஆநந்த பிரேம போதினியாய்ப் பிரதிதடவையும் ஈசுவர தியானத்துடனும் ஆரம்பமாகி, நல்ல நடையில் தெளிவான வாக்கியங்களில் எழுதப்பட்டு, எண்ணற்ற அநுபவங்களேயும், ஆழ்ந்த ரகசியங்களேயும், பயனுள்ள விஷயங்களேயும் தன்னுள் அடக்கிக்கொண்டு தமிழுலகமெல்லாம் சென்றுலாவி வருகின்றது. அதன் அருமை பெருமைகளை நன்குணர்ந்தோர் அதனை எப்போதும் ஆதரித்து வருவரென்பது நிச்சயம். இந்த சொற்ப காலத்துக்குள் பல்லாயிரக்கணக்கான சந்தாதாரர்கள் சேர்ந்து, இப்பத்திரிகை வெகு சிரேஷ்டதரமான நிலேயில் உயர்ந்து விளங்குவதும் ஈசுவர கிருபையை நன்கு விளக்கும். இப்பத்திரிகையின் பெரிய நிர்வாகத்தை யேற்றுச் சிறப்புடன் நடத்தி வருகின்ற இதன் அதிபர் ஸ்ரீமான் தி. இராஜகோபால் முதலியா ரவர்கட்கு இதை வாசிக்கிறவர்கள் எல்லோரும் நன்றி கூறுவார்கள். அவ்வாசகர்களும், இப்பத்திரிகையில் ஒரு புது உத்ஸாகம் உண்டாகும்படி மிக்க பிரயாசையுடன் எழுதிவருகின்ற இதன் ஆசிரியரும் மகிழும்படிக்கான 'நன்மை' இதனாலுண்டாக இறைவன் அருளுவாராக. இப்புதுவருடத்தில் நமது "ஆநந்த குணபோதினி" இன்னும் ஸர்வ சிலாக்கியமாய் உயர்வுற்று ஜ்வலிக்குமென்பது திண்ணம். நமது நேயர்களான பத்திரிகாபிமானிகள் அனைவருக்கும் நமது புது வருட வந்தனங்களைப் பிரேமபூர்வமாய்த் தெரிவித்துக் கொள்கின்றோம். ஸர்வலோக சரண்யாகிய ஜகதீசன் நம்மெல்லோரையும் ரக்ஷிப்பாராக. வந்தேமாதரம்.

பத்திராசிரியர்.

# அநுபவித்து உணர்வதிலுள்ள சுவை நயங்கள்.

I

ஆநந்தம் என்பது அனுபவித்து உணரவல்லார்க்கே உண்டாவதாம். 'அநுபவித்தல்' என்பது தானே மனது வைத்துச் செய்யும் ஒன்றிலிருந்து பெறும் இன்பச் சுவையாம். 'இன்பம்' என்பது தான் விரும்பியது கிடைத்து அதனுல் எய்தும் சுக நிலையாம். 'சுக'மாவது மனதின் சாந்தமும் நிறைவும் திருப்தியுமாம். எந்த வேலையையும் பிறரின் வற்புறுத்துதலுக்காகவென்று எழுந்து சென்று வெறுங் கடமையாக மாத்திரம் நினைத்துச் செய்வதற்கும்,—அதில் ஒரு ஆசையை வைத்துச் செய்வதற்கும்,—அதிக வித்தியாசமுண்டு. உதாரணமாக, தன் பந்து வர்க்கத்தில் இல்லாமல் தூரமான அன்னிய இடத்தில் ஒரு பெண்ணை ஒருவன் விவாகம் செய்துகொண்டு இல்வாழ்க்கை நடத்துகின்ருன். அவனது கிருகத்திற்கு அவனைச் சேர்ந்த உறவினர்கள் வருகையில் தன் மனைவிக்கு அவர்கள் இன்னின்னர், இன்னின்ன உறவு என்று தெரிவித்து, அவர்களுக்கு விருந்திட்டுச் சரியாக உபசரணைகள் செய்யும்படி ஏவுகின்ருன். அவன் மனைவியோ தூரமான இடத்துப் பெண்ணுதலின் வந்துள்ள உறவினர்களிடத்தில் எவ்வித பற்றுதலுமின்றி, கணவனின் தொந்தரைக்காகவென்று உபசரணைகள் செய்யத் தொடங்குகிருள். கணவனும் அவள் சரிவரச் செய்கிருளா வென்று அருகே யிருந்து கவனிக்க வேண்டியவனுகிருன். கணவனைச் சேர்ந்த உறவினராயில்லாமல் அந்தப் பெண்ணின் தாய்வீட்டு மனுஷ்யர்களாக இருந்துவிடின், கணவனின் தூண்டுதலில்லாமல், கணவன் வெறுத்தாலுங் கூட தான் மிகுந்த ஆசையும் அக்கரையுமாய் சிரத்தைவைத்துத் தன்னவர்களை உபசரிக்கிருள். மனது வைத்து ஒரு காரியம் செய்வதற்கும், பிறரின் தொந்தரைக்காகவென்று செய்வதற்கும் எவ்வளவு பேதம் இருக்கிறது? இவ்விதமே, ஒருவர் தொழிலுக்காகவென்று மட்டும் சங்கீதம் கற்று, கேட்போரின் நிலையைப் பார்த்து அதற்குத் தக்கபடி அவர்கள் திருப்தியுறும் வண்ணமாகப் பாடுவது ஒருவிதம்; இவ்விதம் பாடுவதிலுள்ள ஆநந்தத்தைத் தாமும் அநுபவித்துப் பிறருக்கும் இன்பம் ஊட்டுவது மற்ருெரு விதமாம்.

---

தன் கையில் அவன் சிக்கும்வரை தித்திப்புச் சொல். பிறகோ அலக்ஷியம். சிடுசிடுப்பான பேச்சு. தன் புத்தியே பெரிதென்று எண்ணும் நினைவு.

இவ்விதமே வித்தியாவந்தனை ஒருவன் தன்னைப்போலவே தன் மனைவியும் கல்வியில் சிரத்தையும் ஆவலுமுள்ளவளாக வேண்டுமென்று, அவளைப் படிக்குமாறு ஸதா தொந்தரை செய்கிறான். அவனுடைய கட்டாயத்திற்காகவென்று அந்த சுந்தரியும் அவன் தந்த புஸ்தகங்களை வாசித்து முடிக்கின்றாள். இதில் அவள் இன்பம் காண இயலாது. கணவனின் தூண்டுதலின்றித் தானாகவே விருப்புற்று நூல்களை வாசிக்கப் புகுவாளாயின், அதிலே பூர்த்தியாய் இன்பச் சுவையை உணர்ந்து அநுபவிக்கிறாள். இவ்விதம் அனுபவித்துப் படிப்பதில் தான் உண்மையான ஆநந்தம் இருக்கின்றது. அனுபவித்துப் படிப்பதற்கென்றே ஒரு புஸ்தகத்தைக் கையில் எடுக்கவேண்டும். அப்புஸ்தகத்திலுள்ள இன்பச் சுவையையெல்லாம் அப்படியே 'உறிஞ்சி' விடவேண்டும். அப்போதுதான் அதில் இருக்கிற உண்மையான சுகம் இன்னதென்று தெரியும். கல்வியின் உண்மையான பிரயோஜனமே இதுதான். இவ்விதம் புஸ்தக வாசிப்பிலே ஒரு ருசி பிறந்துவிட்டால், அதை அநுபவித்துப் படிக்கும் பேரறிவு தோன்றிவிட்டால், இனி அவர்களின் வித்தியாபிவிருத்தியைக் குறித்துக் கவலைப்பட வேண்டியதில்லை. அது தனக்குத் தானாக வளர்ந்து விருத்தி பெற்றுவிடும். ஓர் இடத்திற்குச் செல்லுகையில் அங்கு வீண் பொழுதைக் கழிக்க நேருமோவென்று கையில் ஒரு புஸ்தகத்துடன் செல்வோர் பலர். இவர்கள் அநுபவித்துப் படிப்பதிலுள்ள இன்பச் சுவையைச் செவ்வனே கண்டு தேறிய ரத்நங்களாவர்.

இவ்விதம் அநுபவித்துப் படிப்பவர்களுக்கு ஒரு பக்கத்தை வாசித்து முடிப்பதில் அதிகமான நேரம் செல்லும்படியிருக்கும். (1) முதலில் படிப்பது, (2) பிறகு அதன் ரஸத்தை யுணர்ந்து அநுபவித்து ருசிப்பது, (3) பின் அந்த ரஸமான பாகங்களையெல்லாம் குறிப்பிட்டு வைப்பது, (4) அதன்பின் அந்த ரஸாநுபவங்களிலிருந்து தன்னகத்தே பெருகும் பலவித யோசனைகளிலும் தன் சிந்தையைச் செலுத்திப் பூரிப்பது, (5) அதன்பின் மௌனமாய்ச் சில நிமிஷங்கள்வரை அந்த இன்பத்திலேயே நிலைத்திருப்பது, (6) அந்த அநுபவிக்கையான சுகாநுபவத்திலிருந்து உண்டான களைப்பினைத் தேற்றிக்கொள்வது, (7) பிறகு, அடுத்த பக்கத்தைத் திருப்பி வாசிக்க ஆரம்பிப்பது ; இவ்வளவு 'லீலை'களும் ஒரு நிமிஷ காலத்திற்குள் நேர்ந்து முடிவுற்றுவிடுமாயினும், சாதாரணமாக ஒருவன் மேலெழுந்தவாரியாக ஒரு புஸ்தகத்தை அப்படி இப்படி யென்று பார்த்துவிடுகிற நேரத்தைவிட, இந்த அநுபவித்துப்

---

*நீ நயமாய் நடக்கும்வரை நூலாசிரியர்கள் உனக்கு நல்லவர்களே. நீ மீறிச் சீறினுல் உன்னையே வைத்து ஒரு தனிக்கதை எழுதிவிடுவார்கள்.*

படிப்பதிலே அதிகமான நேரமே செல்லக்கூடும். "கூடும்" என்ற உத்தேசச் சொல் எதற்காக? அதிகமான நேரமே பிடிக்கும் என்று உறுதியுடனும் கூறலாம். ஒரு புஸ்தகத்தை ஏதோ மேல் பார்வை பார்ப்பதற்காகவென்று வாசிப்பவன் நாடகக் கொட்டகைக்கு வெளியில் நிற்பவனுக்கு சமமாவான். அநுபவிப்பதற்கென்று வாசிப்பவனோ நாடகக் கொட்டகைக்குள் சென்று அன்றைய நாடகத்தை நேரிற் கண்டு உண்மைச் சுவையை உணர்பவனுக் கொப்பாவான். ரூபலாவண்ய சோபிதையான ஒரு ரமணீரத்நத்தை யொருவன் வெறுமனே பார்த்துவிட்டுச் செல்கிறான். இன்னொருவனோ அந்நங்கையைத் தன் தாயாகவோ, ஸகோதரியாகவோ, தனது தர்ம பத்தினியாகவோ, அனுபவித்துச் சுவைக்கின்றான். இவ்விரண்டுக்கும் உள்ள பேதமே சாதாரணமாக வாசிப்பதற்கும், அநுபவித்து வாசிப்பதற்கும் ஏற்படுகின்றது. தன் கணவனால் தூண்டப்பட்டு அவனைச் சேர்ந்தவர்களை உபசரிக்கும் பெண்ணினுடைய மனோ நிலையில் சாதாரணமாக வாசிப்பவனைச் சொல்லலாம். தன் கணவனின் வேண்டுதலின்றியே, தானாகவே விரும்பிமுன்வந்து தன் தாய் வீட்டு உறவினர்களை மனஸ்பூர்வமாக உபசரித்து இன்ப மெய்தும் ஒரு பெண்ணினது மனோ நிலையில் அநுபவித்துப் படிப்பவனை வைத்துப் பேசலாம். அநுபவித்துப் படிப்பதில் தான் கல்வியின் உண்மையான பயனும், இன்பவூற்றும், தேர்ச்சியும், விருத்தியும், மேன்மையும் அடங்கியிருக்கின்றது.

அநுபவித்து உணர்வதென்பது வித்தையில் மட்டுமல்ல. எல்லாவற்றிலுமே அநுபவித்து ருசிக்கும் உணர்ச்சி தோன்றவேண்டும். அவ்விதம் பூர்ணமாக அநுபவிப்பவன் தான் அந்தப் பொருளைப் பெற்றதின் பயனை உண்மையில் உணர்ந்தோனவன். "இதோ பார்! 'பீரோவ்' நிறையப் புஸ்தகங்களை அடுக்கி யிருக்கிறேன்" என்றான் ஒருவன். "மனதில் இல்லாமல் 'பீரோ' வில் அடுக்கியிருந்து பயனென்ன?" என்றான் மற்றொருவன். இவ்விருவரின் பேச்சுகளிலிருந்து அநுபவிக்கப்படாது வெறுமனே வைத்துக்கொண்டுள்ள ஒன்றுக்கும், அநுபவித்து உணரும் ஒன்றுக்குமுள்ள பேதம் பிரகாசமாய்த் தெரியவரும். அநுபவித்து ருசிப்பதில்தான் அதிக சுவையும், மனோரம்யமும் திருப்தியும் ஆநந்தமும் அடங்கி யிருக்கின்றது. கரும்பை வெறுமனே கையில் வைத்திருப்பதற்கும், அதை மென்று ரஸத்தைப் பருகி ருசிப்பதற்கும் பேதம் இல்லையா? ஒருவனுக்குத் தாயார் இருக்கிறாள். அவனோ அவளைப் பிரிந்து வெகு தூர நாட்டில் தன் மனைவி மக்களுடன் வசிக்கிறான். இவன் தனக்கு மாதா ஒருத்தி இருப்பதாகச் சொல்லிக்கொள்ளக் கூடுமே

நொந்தபோனவனை வாட்டாதே. அலைந்து வந்தவனுக்கு அப்போதே வேலையிடாதே.

யன்றி, அந்தத் தாயின் தனியன்பை 'அநுபவிக்க' முடியுமோ? அவனுடைய தம்பி அந்தத் தாயின் பக்கத்திலேயே இருக்கிறான். தன் தாயுடன் கொஞ்சுகிறான். தாயாருக்கு வேண்டியவற்றை யெல்லாம் வாங்கிவந்து போடுகிறான். தாய் தனக்கு அன்னம் பரிமாற ஆசையுடனே அந்த ஒரு தனிச் சுவையை அனுபவிக்கிறான். அந்த அம்மையின் பாத மலர்களைப் பிடித்து வலியெல்லாம் போகப் பிசைகிறான். அந்த அம்மையின் பணிவிடைகளை யெல்லாம் ஆசையுடனே செய்கிறான். அந்த மாதாவுக்குப் பக்கத்திலேயே எப்போதும் இருக்கிறான். அந்த அன்னையுடன் பச்சைக்குழந்தை போல் ஆநந்தமாய் ஸயனித்து தன் காலை அன்னையின்மேலே போட்டுக்கொண்டு அந்த இன்பச் சோர்க்கத்திலே நித்திரை போகிறான். பிணியாயுள்ள தன் தாயின் சேலைகளையெல்லாம் ஆசையுடனே துவைக்கிறான். இவ்வாறெல்லாம் அந்த அம்மையின் அருகிலேயே இருந்து, இவ்வுலகிலேயே வேறு எங்கணுமே காணமுடியாத ஒரு தனி இன்பத்தை, ருசிகரத்தை அந்த ஆசைத் தாயிடமிருந்து அநுபவித்து ஆநந்திக்கின்றான். இந்தத் தம்பியினுடைய 'அநுபவித்து உணரும் ஆநந்தத்தை'த் தூர நாட்டில் எங்கோ தன் மனைவி மக்களுடன் பிரிந்து நிற்கும் அந்த மூத்த தனயன் பெற இயலுமோ? அவனுக்கு இந்த அநுபவச் சுவை — பாக்கியம் — பேறு — மகாப் பிரசாதம் கிடைக்குமோ? தாயார் தனக்கு இருப்பதின் பயனை நன்றாக அநுபவித்துச் சுவைத்து ருசி பார்க்கவேண்டும். அது செய்து கொடு, இந்தப் பலகாரம் செய்துதா, அந்த ஊறுகாய் போடு என்று சதா 'தோந்தரவு' செய்து அதற்கு வேண்டியதெல்லாம் வாங்கி வந்து தந்து செய்யச்சொல்லி, அந்த ஆருயிர்த்தாய் தனக்கு அவற்றைத் தனது பொற்கரங்களால் கொண்டுவந்துதர, தான் ஆசையுடனே அவற்றைப் பெற்று நன்றாகத் தின்று 'கொழுத்து' ருசித்து அநுபவிக்கவேண்டும். (இங்கு "கோழுத்து" என்ற பதத்தை மஹா கௌரவமான பொருளிலே உபயோகித்துள்ளோம்.) மேலே 'தோந்தரவு' செய்து என்று யிருக்கிறது. தாயிடத்தில் தான் தொந்தரவு செய்யலாம். அந்த அம்மை ஒருத்திமட்டுமே தான் அதைப் பொறுத்துக்கொண்டு நாம் கேட்டதையெல்லாம் கொடுப்பாள். நமது தொந்தரவால் அந்த நேசத்தாய்க்குக் கோபம் வருமோ? ஒருபோதும் வராது. கோபத்துக்குப் பதிலாக அன்பு வரும். ஒரு குழந்தை தன் தாயை எவ்வளவு தொந்தரை செய்கிறது? உடனே வந்து பால் தரும்படி எவ்வளவு அழுகிறது? உடனே தாய் ஓடிவருகிறாளல்லவா? அது அந்த அம்மைக்கு ஒரு ஹிம்ஸையாகப்படுமா? அந்தக் குழந்தையிலிருந்துதானே நாம் அந்தத் தாயால் வளர்க்கப்பட்டு மீசை முளைத்த மனிதர்களானோம்.

---

தனியாயுள்ளபோது உன் குற்றத்தை நீயே நினைத்துப் பார். திருந்து.

(இப்படி அன்னையின் கையில் வளரும் பாக்கியம் யாவருக்கும் கிடைப்பதாக.) என்ன மீசை தாடி வந்தபோதிலும், சக்ரவர்த்தியானாலும், "டில்லிக்கு பாதுஷா எனினும் தல்லிக்குப் பிட்ட" (தல்லி—தாய். பிட்ட—குழந்தை.) என்ற தெலுங்கு பழமொழிக்கிணங்க நாம் அந்த அன்னைக்கு நாளைக்கும் குழந்தைகள்தானே! ஆதலின் குழந்தைகளாகவே இருந்து குழந்தைப் பருவத்தில் செய்த தொந்தரவை இன்னும் செய்து அவ்வழியில் தாயின் அன்பு கண்டு அநுபவித்து ருசிக்கலாம். அது தனியான ஒரு அமிர்தச் சுவையன்றோ? அதற்கு இணை இவ்வுலகில் ஏது? கடவுளிடத்தில் அவ்வன்பைக் காணலாமென்பர். கடவுள் எங்கேயோ இடக்கிறார். அவரை யார் கண்டது? நம்மைப் பத்து மாதம் தனது திருவயிற்றிலே சுமந்து பெற்று நமக்குப் பாலூட்டித் தாலாட்டிச் சீராட்டுவித்து நாளைக்கும் நம் நினைவாகவே இருக்கும் நமது ஆருயிர்த் தாய்தான் நமது கடவுளாவர். அவரே நேரிற் காணும் கடவுளாவார். இந்தத் தெய்வமாதாவின் அடிபணிந்து வணங்கி நடந்து அந்த அம்மை காட்டும் அன்பையெல்லாம் வாரி வாரிப் பருகி, அநுபவித்து, ருசித்துவிட்டால், அதுவே காணுதிருக்கும் கடவுளை இனிகாண்பதற்கும் வழியாகும். இவ்வாறு அநுபவித்து உணரும் சுவையே சுவை. அதுவே பெரும் பாக்கியமுமாகும். இனி, தாயைத் தழுவிக்கொண்டு அந்த அம்மையின் பக்கத்தில் சின்னஞ்சிறு குழந்தைபோல் உறங்குவதில் அதிக இன்பமா?—மனைவியுடன் காதலோடு ஸயனிப்பதில் அதிக இன்பமா?—என்பது கேள்வி. இவ்வினாவைப்பற்றியும், இன்னுமுள்ள மற்றவரையும், மற்றவைகளையும், கருணையங்கடலான கடவுளையும் அநுபவித்து உணருவதிலுள்ள சுவைநயங்களைக் குறித்தும் மறுஸஞ்சிகையில் அநுபவபூர்வமாக அன்புடன் ஆராய்வோம்.

## என் தாய்

தன்னரிய மென்மைத் தனங்களிடச் சுரக்கும்
இன்னமுத மூட்டி யிருதோண் மிசைத்துயிற்றிக்
கன்னமிசை யுள்ளங் களிதூங்க முத்தாடி
என்னை யளித்தவரார்? ஈன்றாளை யன்றியுமே.

(ஆநந்தகதாகல்பகம்)

கல்லின்மீது குடம் பட்டாலும், குடத்தின்மீது கல் பட்டாலும் குடத்திற்குத் தான் கேடுதி.




அரிதாய்க் கிடைத்த "சுந்தரதீரனின் டைரி" யிலிருந்த ஒரு பிரதியில் காணப்பட்ட விஷயம் பின் வருமாறு :—

கமலாபுரம் செப்டம்பர்மீ 30உ

அதிகாலையில் வழக்கத்திற்கு முன்னதாகவே எழுந்து நான் உலாவப் புறப்பட்டேன். அப்பொழுது எனது நண்பரொருவர், சுருட்டைப் பிடித்துக் கொண்டே என்னருகே வந்து, "சுந்தரம்! வெளியே வருகின்றீரா ?" என்றார். நான் ஆகட்டும் என்று தலையசைத்தேன். இருவருமாக, பாகீரதி என்ற நதியினருகே சென்று காலைக் கடன்களை முடித்து விட்டு, ஆற்றில் ஸ்நானம் செய்யப் புறப்பட்டோம். அவ்வமயம், "சுந்தரம்"! என்று யாரோ என்னை அழைப்பதைக் கேட்டேன். திரும்பிப் பார்த்தேன். ஒருவருமில்லை. என் பின்புறம் ஒரு புராதன மண்டபம் மட்டுமேயிருந்தது. ஒருவேளை மண்டபத்திலிருந்து யாராவது அழைத்தார்களா என்று யோசித்தேன். நம்மிடம் அவசியம் பேச விரும்புகிறவர்கள், இன்னுமொரு தடவை கூப்பிட மாட்டார்களா என்று இரண்டடி எடுத்து வைத்தேன். மறுபடி அதே சப்தம் கேட்டது. திரும்பினேன். மண்டபத்தின் வெளித் தூணருகில் வெள்ளையுடுப்பணிந்த யௌவன மங்கை யொருத்தியைக் கண்டேன். அவள் முகத்தைக் கண்டதும் இறந்துபோன எனது மனைவியின் ஞாபகம் வந்தது. சிறிது திகைத்து நின்றேன். "தயவு செய்து கோமளம் என்பவளைப் பற்றி அறிந்து கொள்ளவாவது வரலாகாதா ?" என்றாள்.

கோமளம் என்பது எனது பிராண நாயகியின் பெயர். அவள் இறந்து ஆறு மாதங்களாகின்றன. அவளைப் பற்றி இந்த வெள்ளைக் கலையாள் யாது கூறப் போகின்றாள்? என்ற எண்ணம் என் மனதில் தோன்றியது. எதற்கும் அவளைக் கேட்டுத் தெரிந்து கொள்வதென என்னுடன் வந்த நண்பரை அனுப்பி விட்டு மண்டபத்திற்குச் சென்றேன். அந்த வெள்ளைப் புடவைக்காரி என்னை ஒருவாறு நோக்கிவிட்டு, "சுந்தரம்! என்னை முற்றிலும் மறந்து விட்டாயோ ?" என்றாள். அவள் குரல் எப்பொழுதோ கேட்டிருப்பதாக என் மனம் கூறியது.

---

கோழி கூவுவதில் குடி கெட்டுவிடாது. அந்த ஏழையிடத்து இரக்கம் காட்டுவதினாலேயே உன் செல்வம் குறைந்து விடாது.

மற்றும் அவன் வதனம் வெளுத்து, தாடை உலர்ந்து, மேனி ஒடுங்கிக் காணப்படாவிடில், அவளை என் காதலியின் சகோதரி சுவர்ணம்பாள் என்றே கருதி யிருப்பேன். நடையும், உடையும், பாவனையும், மாறித் தோன்றுமிவளைத் திடீரென சுவர்ணம்பாள் என மதித்தல் தகாதெனத் தீர்மானங் கொண்டு, "ஒரு வேளை மறந்திருப்பேன். உன்னை அறிந்து கொள்ள என்னால் முடியவில்லை, நீ யார்?" என்றேன். அவன் "இந்த உலகமே மாயை. உமது கண்களுக்கு சுவர்ணம்பாள் புதிதாகவே காணப்படுவான்" என்றான். நான் உடனே அவளைப் பார்த்து "சுவர்ணம்! "எது இவ்வாறு முற்றும் மாறி விட்டாய்!" என்றேன். "என்ன செய்வது, கால ரீதியால் நான் இந்தவேடம் அணிந்து கொள்ள வேண்டி நேர்ந்தது. நீ என்னை மறந்து விடக் காரணங்களுண்டு. ஆனால் உன் மனைவியை மறந்துவிட்டதற்கு என்ன காரணங் கூறப் போகின்றாய்?" என்றான் அம்மங்கை.

"ஐயோ கடவுளே! அவள் இறந்த பின்பு என் வாழ்க்கையை ஒரு வாழ்க்கையாக மதித்திருக்கிறேனா? நீ யறியாய்! அல்லும் பகலும் என்னைப் பிரியாதிருந்த ஆருயிர்த் தலைவியை இழந்த பின்பு, அனாதையாய் பைத்தியம்பிடித்தவன் போலிருக்கிறேன். உண்மையில்நான் படுந் துயரம்அவள் ஆன்மா அறியும்!" என்றேன். "ஆஹா! அப்படியா! மெய்தானா? நான் ஏன் இந்த வேடம் பூண்டு கொள்ள நேர்ந்த தென்றால், என் அன்பான சகோதரி என்னை விட்டுப் பிரிந்ததினாலேயே என அறிவாய். அவள் இறந்ததாகக்கருதப் பட்ட அன்று முதல் இன்று வரை நல்ல உணவும், உடையும் அறியேன்" என்று மெல்லிய குரலில் மொழிந்தான் சுவர்ணம். நான் "சுவர்ணம்!— அவளிறந்ததாகக் கருதப்பட்ட—என்று ஆரம்பிக்கிறாயே, என்று வியப்புடன் நோக்கினேன். "சுந்தரம்! நீ உலக சுபாவமறியாதவன். என்சகோதரியும் அப்படியே யிருந்தமையால் மோசம் போய்விட்டாள். பணக்காரர்களின் ஆர்ப்பாட்டங்களும், மோசக்காரர்களின் பித்தலாட்டங்களும் உனக்குத் தெரியாது!" என்றான். சுவர்ணம் "என் மனைவி எவ்வாறு மோசம் போயினாள் அதைக் கூறு" என்று கண்ணீர் பெருக, வாய் குழறக் கேட்டேன்.

"சுந்தரம்! கவலை யடையாதே. கவலை மனிதனை எமன் வசம் ஒப்புவிக்கும் வரை உறங்காது. அதை விட்டொழி. உன்னிடம் ஒரு இரகசியம் கூறவேண்டும். அவ்விரகசியம் நீ கேட்பதைப் பற்றியதே" என்று சந்தேகமாய் என்னை நோக்கினான். நான், நாற்புறமும் சுற்றிப் பார்த்தேன். ஒரு ஜீவப்பிராணியும் காணப்படவில்லை. உடனே, அவளை நோக்கிப் பரிதாபகரமாக "அதை என்னிடம் கூறலாகாதா" என்றேன். "நீ அப்பரம ரகசியத்தைக் காப்பாற்ற யியலாதவன்; இன்றிரவு சரியாய் 12-மணிக்கு இதே இடத்தில் என்னை சந்தி; அப்பொழுது நீ, இழந்த நிதியை அளிக்கின்றேன்" என்றாள் சுவர்ணம். "மாலைவரை எங்கே தங்கப் போகிறாய்? என்னுடன் மாளிகைக்கு வா" என்றேன். வெறுப்பு

---

மலர்ந்துவிட்ட புஷ்பம் மறுபடியும் மூடிக்கொள்ளுமா? ஆனவயதுக்குப் பிறகு முன்னிருந்த வயது திரும்புமா? 9-ம் தேதிக்குப்பிறகு 8-ம்தேதிவருமா?

கலந்த சிரிப்புடன் "நான் உன் மாளிகைக்கு என் தங்கையுடன் வருகிறேன்; போய் வா; மனிதர் நடமாடும் சப்தம் கேட்கிறது. இனி நாமிருவரும் பேசிக்கொண்டிருப்பது அழகல்ல" என்று கூறி என்னைப் பிரிந்து செல்ல ஆரம்பித்தான். ஒருபுறம் எனக்கு அவளை விட்டுப் பிரிந்து செல்ல மனமில்லை. மற்றோர்புறம் அவன் வார்த்தையைத் தட்டி நடக்கப் பிரியமுமில்லை. இருதலைக் கொள்ளிக்குள் அகப்பட்ட எறும்பு போலாயினேன். அவன் அருகிலிருந்த தோப்பு வழியே சென்று மறைந்தான்.

"என் மனைவியைப் பற்றி இவன் கூறப் போவதென்ன? ஒருவேளை ஏமாற்றத் துணிந்தானோ? பகைவர்களிடம் காட்டிக் கொடுத்திட இந்த சூழ்ச்சியை நிறைவேற்ற முன் வந்தனனோ? இறந்துபோன என் காதலியின் மாசின்மையை விளக்க இவன் கூறப்போவதென்ன? இறந்தவளோ இனி உயிர் பெற்றுத் திரும்ப வரப் போவதில்லை! இவன் என்னவோ, என்னை உலகமறியாப் பேதை எனக் கூறுகின்றான். உலகத்தை வெறுத்தவன் போல், உடையும், நடையும், வார்த்தையும் திருத்திக் கொண்டான். ஆ! இதைவிட உலகில் ஒரு ஆச்சரியமானதும் அசம்பாவிதமுமான ஒரு செய்தியுண்டா? என் சிற்றறிவிற்கு எட்டவில்லையே!" என்று புலம்பிக் கொண்டே வீடு போய்ச் சேர்ந்தேன். "என்ன செய்வது? இதை யாரிடம் கூறுவது? உற்ற நண்பனை தேவராஜு இராஜதானி நகரத்திற்குப் போய் விட்டான். பெற்ற மாதாவிடம் இதைக் கூறினாலோ பித்தன் என்பாள். பேய் வசப்பட்ட மத்தன் என்பாள். பின்பு மாயக்காரியிடம் அகப்பட்டுக் கொள்ளாதே என எச்சரிக்கை செய்வாள். தந்தையோ உலகவாழ்வை நீத்தார். சுவர்ணமோ கண்டிப்பாய் இதை ஒருவரிடமும் சொல்லாதே யென்று கூறினாள். எனக்கு உலகிலுள்ள விலையுயர்ந்த பொருள்களைக் காட்டிலும் விலையில்லா மாணிக்கமாகிய என் காதலியே என்னை மறந்து உயிர் துறந்தாள். அவளைப் பற்றி இனி அபவாதமோ, சுப செய்தியோ கேட்பதற்கு இருக்கிறேன். சுவர்ணம்! நீ கடைசியில் கூறிய வார்த்தை என் நெஞ்சை திடுக்கிடச் செய்கிறது. உன் தங்கையுடன் என்னைக் காண வருவதாய்க் கூறினையே! இது என்னை ஏமாற்றவா! அல்லது துக்க சாகரத்திலாழ்த்தவா!" என்று கூறிக் கொண்டே யிருந்தேன். மனம் வேதனையால் துன்புறுத்தவாரம்பித்தது. அகில மெல்லாம் ஆட்டுவிக்கும் ஆனந்தாதீதன் திருவருட்டிறம் இதுதானோ! இனி யாரை நம்பி உயிர்வாழ விருக்கின்றேன் என்றேங்கினேன். பின்பு மஞ்சத்தில் படுத்தேன்.

***

இரவு எட்டுமணியிருக்கும். ஒரு கைத்துப்பாக்கியைச் சட்டைப் பையில் வைத்துக்கொண்டு பாகீரதி நதி தீரத்தின் அருகாமையிலுள்ள மயான பூமியை நோக்கிச் சென்றேன். அன்று இரவு மனோகரமாயிருந்தது. சந்திரன் கீழ்த்திசையிலெழுந்தான். மெல்லிய காற்று என் களைப்பை நீக்கியது. நான் செய்யப் போவதைப்பற்றி ஒரே முடிவான தீர்மானங் கொண்டேன். என் மனைவியின் பலிபீடத்தருகே போய் நின்றேன். அப்பலிபீடம் பளிங்குக் கற்களினாலாயது. தூசியினால் ஒருவாறு மாறித் தோன்றியது அப்பலிபீடம். சமீபத்திலிருந்த வாய்க்கால் சல, சலவென, ஓடிக்கொண்டிருப்

பதைப் பார்த்ததும் எனக்கு ஒரு யோசனை தோன்றியது. உடனே என் கைக்குட்டையைத் தண்ணீரில் நனைத்து பலி பீடத்தை நன்றாகத் துடைக்க வாரம்பித்தேன். ஏதாவது அபாயம் நேரிடுவாதனாலும், சுப செய்தி கேட்பதானாலும் என் மனைவியின் பலி பீடத்தைக் கண்டு தேறுதலையடைந்து சுவர்ணத்தைப் பார்ப்பது என்ற தீர்மானத்துடனேயே அங்கு சென்றேன். ஆ! என் மனைவி உயிரோடிருந்தால் என் மனம் எவ்வளவு சாந்தி அடைந்திருக்கும்! என் குடும்ப வாழ்வு எவ்வளவு மனோகா மாயிருக்கும்! கோமளம் இறந்த பின்பு ஒருவரையும் மணப்பதில்லை யெனச் சபதம் செய்து கொண்டேன். இனி என் வாழ்க்கை துன்பம் தருவதோ இன்பம் தருவதோ அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. அன்பென்னும் தங்கச் சங்கிலியினல் கட்டுண்ட எங்கள் வாழ்வு ஒருவாறு முடிவடைந்தது. சாதலென்னும் மலரோ மலர்ந்து மறுபடி மூடிக் கொண்டது. இன்பவாழ்க்கை என்ற படகோ உலகமாகிய சாகரத்தில் கவிழ்ந்தது. இனி என்ன இருக்கின்றது! ஒரு சிலரே என் துக்கத்தைக் கண்டு பரிதவிப்பர். என் மன மறியாதார் என்னைப்பித்தனென்றும், பெண் மாயைப் பிடித்த பேயனென்றும், கோழை என்றும் நிந்திப்பர். அவர்கள் எவ்வாறேனும் கூறிக்கொள்ளட்டும். கற்றுணர்ந்த பெரியாரையும், ஞானசாரியர்களையும், முதலில் மூடரெனக் கூறி, பின் அறிவு வந்தபின் கைகட்டி நிற்கும் நம்மவர் செய்கையை யாரே அறியார்? என் மனைவியைக் கலாசாலையில் கண்டவுடன் நான் கொண்ட காதலும், இடையில் காதல் அரும்பியதையும், அக்கால கோமளாவின் சிறிய தகப்பனார் செய்த வஞ்சனையையும், சுவர்ணம் கோமளாவையும் என்னையும் மறு நகரத்திற்கு அழைத்துச் சென்றதையும், அங்கு மணவினை நடந்ததையும், நாங்கள் இன்பமான வாழ்க்கையை அநுபவித்து வருங்காலம், காலன் என் காதலியினுயிரைக் கவர்ந்து சென்ற கொடிய செய்கையையும் எண்ணி எண்ணி நெஞ்சம் புண்ணுயினேன். பேதையாய், அனதையாய், தனியாய், தேற்றுவாரற்று, என் மனைவி பலி பீடத்தருகில் அழுது கொண்டிருந்தேன். அவ்வமயம் மாதாகோவில் மணி பன்னிரண்டு அடித்தது. யாரோ ஒரு சிறுவன் பாடிய கீதம் என் புண்பட்ட மனதிற்கு இன்பமளித்தது. என்னை யறியாமலே என் முகம் மலர்ந்தது. புன்னகை தவழ்ந்தது! யாது காரணமோ அறிகிலேன்! தூரத்தில் ஒரு ஜோதி தோன்றி மறைந்தது. நானும் தைரியமாய் எழுந்து நின்றேன். என்னை நோக்கி இரண்டு வெள்ளை உருவங்கள் வந்தன. எனது நாவு உலர்ந்தது. கண்கள் சுழன்றன. கால்கள் மரம் போல நின்று விட்டன. உருவங்கள் சமீபத்திலேயே வந்து விட்டன. இன்பமும் துன்பமும் ஏக காலத்தில் வதைக்க ஆரம்பித்தன. ஏனெனில் என் முன் தோன்றிய இரு உருவங்கள் பேய்களல்ல, என்னை ஆசீர்வதிக்க வந்த இரு தேவதைகள்! அவர்கள் யார்? என் மனைவி கோமளமும், சுவர்ணமுமே.

இத்துடன் இது முடிவடைகின்றது. மர்மம் விளக்கும் விஷயங்கள் கோமளாவின் தினமாணக் குறிப்பிலிருந்து எடுத்து இனி எழுதப்படும். எஸ். டி. ஆநந்தன்.

# சாஸ்திர நுட்பங்கள்

1. இயற்கையிலுள்ள பதார்த்தங்கள் எல்லாம் பிராணி, தாவரம், லோகம் என்னும் மூன்று வகுப்புகளில் அடங்கும்.

2. அணுவை ஒருவரும் காணவில்லை. இருக்கிறதிலும் பார்க்க இன்னும் சிறிதாக்கப் படக்கூடாத ஒன்றுக்கே அணு என்று பெயர். அதைப் புலன்களால் அறிய முடியாது.

3. ஒரு கிறேன் (Crain) கஸ்தூரி தன் பாரத்தில் அதிகம் குறையாமல் ஓர் அறையிலுள்ள பரமாணுவை சில வருஷங்களுக்குத் தன் சுகந்த அணுக்களால் நிரப்பிக் கொண்டிருக்கும்.

4. சரிகைக் கம்பிகளுக்குப் பொன் பூசுவதில் ஒரு அடி கம்பிக்குப் பூசும் பொன் எழு லட்சத்து இருபதினுயிரத்திலொரு அவுன்சுக்கு மேற்படாது. சரிகை செய்கிறவர்கள் இதை அறிந்து சரிகைக்கு விலை குறிக்கிறுர்கள். ஒரு அடி கம்பிக்குப் பூசும் பொன் எழு லட்சத்து இருபதினுயிரத்தில் ஒரு பங்கு அவுன்சு ஆனுல், அக்கம்பியில் ஒரு இன்சு மூடும் பொன் எண்பத்தாறு லட்சத்து நாற்பதினுயிரத்தில் ஒரு பங்கு அவுன்சாகவே இருக்கவேண்டும். ஒரு இஞ்சு நீளமான இந்தக் கம்பித்துண்டை நூறு துண்டுகளாகப் பிரித்தாலும் அத்துண்டுகள் ஒவ்வொன்றும் கண்ணுக்குத் தெரியும். அதாவது ஒரு அவுன்ஸ் பொன்னில் எண்பத்தாறு கோடியே நாற்பது லட்சத்தில் ஒரு பங்கு தானும் கண்ணுக்குத் தெரிகிறது. பொருளை ஐந்நூறுமடங்கு பெரியதாக்கிக் காட்டுகிற சூக்ஷ்மக் கண்ணுடியால் (Micrescope) பார்த்தால் ஒரு அவுன்ஸ் பொன்னில் நாற்பத்து மூவாயிரத்து இருநூறு கோடியில் ஒரு பங்கையும் தெளிவாகக் காணலாம். பெரிய பொற்கட்டிக்குள்ள தன்மைகள் லக்ஷணங்கள் எல்லாம் நுண்ணிய இப்பங்குகளில் ஒவ்வொன்றுக்கும் இருக்கும்.

5. பொருள்கள் எல்லாம் காங்கைக்கு விரிந்து, குளிருக்குச் சுருங்குகின்றன.

6. சீனுக்காரக் கட்டியில் அதின் நிறையில் அரை வாசிக்குச் சரியான தண்ணீர் சேர்ந்திருக்கிறது. இதை விளக்குவதற்கு அதில் ஒரு கட்டியை வறுக்க அதிலுள்ள நீர் ஆவியாய்ப் பிரிவதால் அது உருகி வெள்ளையாய் நுரைத்துப் பூர்க்கும்.

7. ரத்தினங்கள் இயல்பிலே உரோசியான பருமனுயிருக்கும். பெரிதாகில் உருவொளியும் திலக்கமும் குறைவாயிருக்கும். ஆபரணத்திற்கு உதவும் மரகதம் ஒரு இஞ்சு நீளத்திற்கு மேல் இருப்பது அபூர்வம். ஒரு இஞ்சு நீளத்தில் உள்ள நீலக்கற்கள் பெரும்பாலும் மங்கலாயிருக்கும்.

8. மரத்தின் தோல் நேருக்கேயன்றிக் குறுக்கே கிழிவதில்லை.

9. குளிர் என்பது காங்கையில்லாமல் இருப்பதையல்ல, அது குறைவாய் இருப்பதைக் காட்டும் சொல். காங்கை எந்தப் பொருளி

---

உன் முகத்திற்கு அருகே உன்னைப் பெருமைப்படுத்திப் பேசுபவர்கள் ஏதோ ஒரு லாபத்திற்காகவே உன்னிடம் அப்படிச் செய்கிறுர்கள்.

லும் ஒருக்காலும் இல்லாமற் போகாது. ஜலக்கட்டியிலும்கூட அதிகமான காங்கை யுண்டு.

10. கையிலுங் குளிரான ஓர் பொருளை, அதிலும் குளிரான தொன்றைத் தொட்டபின் தொட்டால் அது கைக்குக் காங்கையாய்த் தோன்றும். கையை விடக் காங்கையான ஓர் பொருளை அதை விடக் காங்கையாயுள்ள ஒன்றைத் தொட்டபிறகு தொட்டால் அது குளிராகத் தோன்றும்.

11. ஆகவே, ஒரு பொருள் ஒரே சமயத்தில் குளிர், காங்கை இரண்டுமாகத் தோன்றக்கூடும். உதாரணமாக, வலது கையை ஐசுக் கட்டியிலும், இடது கையை வெந்நீரிலும் வைத்திருந்தவுடன், இரண்டு கையையும் ஒருமிக்கத் தண்ணீரில் வைத்தால் அது வலக்கைக்குக் காங்கையாகவும் இடது கைக்குக் குளிராகவும் தோன்றும்.

12. கடுங்குளிரினுலும் கடுங் காங்கையினுலும் ஒரே உணர்ச்சி உண்டாகும். சிவக்கக் காய்ச்சின இரும்பும், கடுங்குளிரில் வைத்த இரசக்கட்டியும், அவைபடும் மேனிப் பகுதியை அதாவது தொட்ட தேகத்தின் இடத்தைக் கொப்பளிக்கப் பண்ணும். ஒரு ஆள் சில பொருள்களைக் குறித்துக் காங்கை யென்றும், குளிர் என்றும் சொல்வது, அந்த ஆளின் காங்கையைவிட அந்தப் பொருள்களின் காங்கை அதிகரித்தும் அல்லது குறைந்தும் இருக்கிறதற்குத் தக்கதாகவே.

13. தனக்கு முற்றிலும் வேறுபட்ட அயல் பொருள்களும்கூட தனக்கு உள்ள அவ்வளவு அளவான (உணரும்) காங்கையை அடையத் தக்கதாய் தன் காங்கையை அந்தப் பொருள்களுக்குள் செல்லவிடுவது காங்கைக்குரிய ஓர் தன்மையாகும். உதாரணமாக, நெருப்புத் தணலுக்குள்ளே வைத்த இரும்பு சூடு கொண்டு சிவக்கிறது. இரும்பும் நெருப்பும் ஒரே உஷ்ண நிலைக்கு வருமளவும் நெருப்பிலிருந்து இரும்புக்குக் காங்கை ஏறிச் செல்லுகிறது. நெருப்புக்குச் சமமான சூட்டையும் இரும்பு கொண்டுவிடுகிறது. காங்கைக்கு பளுவு, பாரம் இல்லை.

14. காங்கை யென்பது வாயுவிலும் மெல்லியதாய் எல்லாவற்றிலும் ஒருமிக்கப் பரவி, அவை எல்லாவற்றிலும் பல பிரமாணமாய்ச் சேர்ந்திருந்து, இப்படிச் சேர்வதால் நாம் காணும் தோற்றங்களை யெல்லாம் பிறப்பிக்கிறதான பொருளே யாகும்.

15. இரும்புச் சலாகையின் ஒரு தலைப்பை நெருப்பில் வைத்துக் காய்ச்சும்போது மற்றத் தலைப்பும் சூடு கொள்ளும். இது எப்படியெனில், சூடான மெல்லிய பொருளொன்று நெருப்பிலிருந்து இரும்பில் ஏறுகிறது. பிறகு அந்த இரும்பிலே கடைசி அணுவிலிருந்து உச்சியிலுள்ள அணுவுவரைக்கும் சென்று, இவ்விதமாக அந்த இரும்பு முழுவதுக்கும் பாவுகிறது. அந்த இரும்பைக் கையால் தொட, சூட்டின் மெல்லிய பொருள் கையிலும் ஏறுவதால் காங்கை யென்னும் உணர்ச்சி யுண்டாகும்.

---

இரண்டுதரம் நன்றாய்க் கேட்டுக்கொண்டு ஒருதரம் பேசு, அதற்காகவே கடவுள் இரண்டு காதும் ஒரு வாயும் கொடுத்திருக்கிறார்.

16. லோகங்களிலும் வேறு பதார்த்தங்களிலும் காங்கை செல்லும்போது அவைகளில் அசைவு உண்டாகிறதென்ற உண்மையைச் சோதனையால் காட்டலாம். உதாரணமாக, பல வளைவுடைய பித்தளைச் சலாகையைக் காய்ச்சிக் குளிர்மையான ஈயச் சலாகையில் வைத்தால், இந்த இரண்டு சலாகையும் ஒரே காங்கை கொள்ளும் வரையில் சூடாயுள்ள பித்தளைச் சலாகையிலிருந்துஆவி வெளிப்பட்டு அது பதறுவதைக் காணலாம். சூட்டின் மெல்லிய பொருள் ஒரு வஸ்துவின் மீது ஏறி அதைத் தீப்பற்றிக்கொள்ளும்படி செய்கையில் அந்தத் தீப்பற்றியவஸ்து அசைந்து வளைவதையும் காணலாம்.

(தொடரும்.)


ஒவ்வொரு நிமிஷத்தையும் எண்ணிப்பார்த்து வேலை செய்வோருக்கும் ஒரு தினத்தின் பாதி பொழுதை வீண்போக்கப் பல சமயங்கள் நேர்ந்து கொள்கின்றது. தேடிப்போன இடத்தில் அந்த மனுஷ்யர் இல்லாதிருந்தால் அன்று பாதி பொழுது வீணே தான். ரயிலுக்குப் புறப்படுகையிலும் பாதி பொழுது வீண். எவ்வளவு காத்திருப்பினும் ரயிலைக் காணோம்!

## எதிர்பார்ப்பவரின் மீது நினைவு.

“இந்தப் பித்தம் பிடித்த மனக் குரங்கு ஓடும் ஓட்டத்திற்கு அளவுண்டோ? கிடையாது. ஒருவரை மனதில் திரிகரண சுத்தியாய் நினைத்து—அவர் அவசியம் வருவார்—என்று எதிர்பார்த்தால், கண்ணுக்குத் தூக்கம் வராததோடு, கதவின் வெளியில் நாய், பூனை, பெருச்சாளி முதலியவை போனாலும் காற்றடித்துக் கதவு அசைந்தாலும், தான் எதிர்பார்த்தவர் வந்துவிட்டாரேன நினைத்துச் சட்டேன்று கதவைத் திறந்து பார்த்து, அங்கு எவரும் இல்லாததால் ஏமாறிப் படுத்துக் கொள்வது சர்வ சாதாரணம். இப்படி ஒரே இரவில் டல முறை எழுந்து பார்த்து ஏமாறியபோதிலும், திரும்பத் திரும்ப அப்படிப்பட்ட சத்தம் கேட்கும்போது இம்முறை திட்டமாய் அவர்தான் வந்துவிட்டாரேன்று நினைத்துக் கதவைத் திறந்து பார்ப்பதும் வழக்கம்! இது உண்டா? இல்லையா?

(வரதராஜம் 1)

# பிரபஞ்ச நவீனங்கள்

1. நமது தேஹத்தில் தனித் தனியாக இருநூற்று ஐம்பத்திநான்கு எலும்புகள் இருக்கின்றனவாம். நமது ஹிருதயம் ஐந்து அங்குல நீளம், மூன்றரை அங்குல அகலம், இரண்டே கால் அங்குல கனம் உள்ளதாயும், தேகத்திலுள்ள எல்லா அவயவங்களைவிட சுறுசுறுப்பாய் இருபத்திநான்கு மணியும் வேலை செய்து கொண்டிருக்கிறது. நமது தேஹத்தில் ஸதா ஓடிக்கொண்டிருக்கும் ரத்தத்தின் வேகம் மணிக்கு ஏழு மைல் விகிதமாம். நமது தேஹத்தில் மொத்தம் நானூற்றிருபது நரம்பு தசைகளாம். சரியான ஆரோக்கியமுள்ள மனிதனுக்கு ஒரு நிமிஷத்திற்கு எழுபத்தைந்து முதல் எண்பது வரையில் நாடி யடிக்குமாம். புருஷர்களை விட ஸ்திரீகளுக்கு இன்னும் வேகமாயடிக்குமாம்.

2. ஐப்பான் தேசத்திற்கு உள்பட்டதும் அதற்கு அருகிலுள்ளதுமான கொரியா (Korea) தேசத்தின் பிரதான நகரமாகிய ஸியல் (Seoul) என்னுமிடத்தில் தினம் காலையில் எட்டு மணிக்கும் மாலை மூன்று மணிக்கும் பெரிய கண்டாமணி ஒன்று அடிக்கப்படுமாம். அந்த மணி நேரங்களுக்குள்தான் அப்பட்டணத்து ஸ்திரீகள் தங்கள் வீட்டை விட்டு வெளியில் செல்லலாமாம். மற்றவேளைகளில் தங்கள் புருஷர்களுடனாவது அல்லது தனியாகவாவது வெளியில் வந்து அதினால் அவர்களுக்கு ஏதாவது அபாயம் ஏற்பட்டால் அவ்வூர் துரைத்தனத்தார் உதவி செய்யமாட்டார்களாம்.

3. பர்மாதேசத்திற்குத் தெற்கு பாகத்திலுள்ள ஸுமாத்திரா என்னும் தீவின் உள் பாகத்தில், நெல் பயிரிடும் நஞ்சை நிலங்களில் ஸ்திரீகள் நாற்று நடும்பொழுது தங்கள் தலைமயிர்களை அவிழ்த்து பின்புறமாக முதுகின்மேல் தொங்கவிட்டு வைத்துக்கொண்டுதான் வேலை செய்வார்களாம். அப்படிச் செய்தால் தான் அவர்களின் கேசங்கள்மாதிரி நெற்கதிர்களும் நீண்டு நன்றாய் வளரும் என்று அவர்களுக்கு நம்பிக்கையாம்.

4. கல்கத்தா மெயிலானது பம்பாய் மெயில் மாதிரி அடிக்கடி நாலு ஐந்து மைல்களுக்கு ஒரு தரம் நிற்காமல் மணிக்கு சாதாரணம் இருபத்தைந்து முப்பது மைல் வேகம் செல்லும். இருப்புப்பாதை வண்டித் தொடர்களின் இஞ்சின்கள் ஒவ்வொருமைல் ஓட்டத்திற்கும் சுமார் நாற்பது பவுண்டு நிறையுள்ள நிலக்கரியைச் சாப்பிடுமாம். வண்டித் தொடர் நாம் இறங்கவேண்டியபட்டணத்திற்கு அருகில் வந்தும் 'கைகாட்டி' யிறங்காமல் வண்டி நின்று அதினால் தாமஸம் ஏற்பட்டால் நமக்கு அதிக கோபம் ரயில்வேக் கம்பெனியார்மீது வந்துவிடுகிறது! இப்படி வண்டித்தொடர் நிற்பதினால் கம்பெனியாருக்கு நஷ்டமேயொழிய லாபமில்லை என்பதை நாம் அறிந்து கொள்ளவில்லை. சாதாரணமாய் ஒரு தரம் ஒரு இருப்புப்பாதை வண்டித் தொடர்கைகாட்டிமரத்தடியில்நின்று விட்டுமறுபடியும் இஞ்சினைக் கிளப்பி அங்கிருந்து ஸ்டேஷனுக்குச் செல்வதில் எப்பொழுதும் செலவழிகிறதை விட மூன்றரை ரூபாய் அதிகமாய்

---

தண்ணீரை இறைத்துவிட்டால் மச்சம் தானே வெளிப்படும்.

பிரயாணிவண்டித்தொடருக்கும்,ஆறு ரூபாய் சாமான்வண்டித் தொடருக்கும் ஆகிறதாம். இந்த மாதிரி ஒரு வருஷத்திற்குக் கணக்கு செய்தால் அது பெரும் தொகையாகும்.

5. கழுதைப்புலி என்று ஒரு மிருகம் உண்டு. அது சாதாரணமாக மலைப்பிரதேசங்களில் வசிக்கும். பார்வைக்குக் கழுதை மாதிரியிருக்கும். ஆனல் சுபாவத்தில் புலியை ஒத்து இருக்கும். நாம் சந்தோஷமாயிருக்கும் பொழுது சிரிப்பது போல், அல்லாமல், இந்த மிருகம் கோபமா யிருக்கும் பொழுதும், பசியா யிருக்கும் பொழுதும் சிரிக்குமாம். சாதாரணமாய் ஆடுமாடுகளை அடித்துத் தின்னுமாம். சமயம்வாய்த்தால் மனிதனையும் பக்ஷிக்குமாம். இந்த மிருகத்தின் கொழுப்பு முடக்கு நோய், கை, கால், பிடிப்பு, முதலிய வியாதிகளுக்குக் கைகண்ட ஔஷதமாம்.

6. சமுத்திரங்களில்கப்பல்களை இருட்டில் பாறைகளிலும் கரையோரத்திலும் மோதிவிடாமல் மாலுமிகளை எச்சரிப்பதற்காக தீபஸ்தம்பங்களை ஏற்படுத்தி யிருக்கிறார்கள். இப்பொழுது ஆகாயக் கப்பல்கள் ஏற்பட்டு விட்டதினல் அவைகள் ஆகாயத்தின் இருட்டில் ஒரு ஊரை விட்டு வேறு எங்கேயாவது செல்லாமல் அவைகளுக்கு வழிகாட்ட ஆகாயத்தில் வெளிச்சம் செல்லும் படியான தீபஸ்தம்பங்கள் உலகமெங்கும் ஏற்பாடாகின்றன. இந்த தீபஸ்தம்பங்களுள் மிகப்பெரியது அமெரிக்காவில் வர்ஜீனியா என்னும் மாகாணத்தில் சார்லட்ஸ்வில்லா என்னும் பட்டணத்தில் இருக்கிறதாம். அந்த தீபஸ்தம்பத்திலிருந்து ஆகாயத்தை நோக்கிக் கிளம்பும் வெளிச்சத்தின் கிரணமானது நூற்று முப்பத்தெட்டு கோடி மெழுகுவர்த்தி விளக்குகளின் சக்திக்கு ஸமானமானதாய் இருநூற்றைம்பது மைல் தூரத்திற்கு நன்ருய்த் தெரியுமாம். அவ் வெளிச்சம் ஆகாயத்தை நோக்கிச் செல்லாமல் நம்மை நோக்கி சென்றல் நாம் ஐம்பது மைல்கள் தூரத்திலிருந்து அவ்வெளிச்சத்தில் சுலபமாய், "ஆநந்த குணபோதினி" யை வாசிக்கலாமாம்!

7. சென்னையில் 'பீபில்ஸ் பார்க்' என்னும் மைதானத்தில் வைக்கப்பட்டிருக்கும் உயிர்காலேஜில் 'ஹிப்போபடமஸ்' என்னும் மிருகம் இருக்கிறது. அம்மிருகத்தை நாம் ஸாதாரணமாக நீர்யானை என்று சொல்லுகிறோம். ஆனல் அது தப்பு. நீர்யானை என்பது சாதாரணமாய் மூன்றங்குல உயரம் தான் இருக்குமாம். பர்மா தேசத்தில் மோல்மீன் என்னும் நகரின் அருகில் இருக்கும் ஸால்வீன் (Salween River) நதியில் இந்த விநோத ஜந்து அகப்படுமாம். ஆனல் வெகு அபூர்வமாம். இவைகள் ஆற்றில் எங்கேயாவது இருந்தால் அவ்விடத்திற்குப் பெரிய யானைகள் வாராவாம். பெரிய யானைகள் ஜலத்தில் இறங்கினல் இந்த சிறிய ஜந்

---

ஒருவரிடம் ஒன்று சொல்லத் தொடங்குமுன், அதை அவர்களுக்கு முன்பே சொல்லியிருக்கிறோமோ என்று நினைத்துப் பார்.

நீயும் வாழட்டும், அவனும் வாழட்டுமென்று போயிருந்தால் இத்தனை விரோதங்களும், செலவுகளும், பாடுகளும் நோ இருக்குமல்லவா?

துக்கன் அவைகளின் உடம்பில் தொத்திக்கொண்டு தங்களுடைய விஷம் நிறைந்த தந்தங்களால் பெரிய யானைகளின் தேகத்தைக் குத்தி விஷத்தால் பெரிய யானையைக் கொன்று விடுமாம். இவைகள் சாதாரணமாய் எழுபது வயது வரையில் உயிருடனிருக்குமாம். இத்துடன் உள்ள படத்தில் அம்மிருகத்தை ஒரு அங்குலமளக்கும் கருவியின் (Foot rule) யின் பக்கத்தில் புகைப் படம் எடுத்து இருக்கிறது.



நீர் யானை.

8. ஆபிரிகா கண்டத்தில் (UGANDA) உகாண்டா தேசத்தில், பஹுமா(Bahuma)என்று ஒரு ஜாதி மனிதர்கள் வசிக்கிறார்கள். அவர்களுடைய கல்யாண நிச்சயம் செய்யும் விதம் விநோதமானது. எந்த கல்யாணமாகாத புருஷனாவது தனக்கு இஷ்டமான கன்னிகையை மணம் புரிய எண்ணங்கொண்டால் கூஜா நிறையப் பால் எடுத்துக்கொண்டு, அக்கன்னிகையின் எதிரில் வந்து தன்னை மணஞ்செய்து கொள்ளும் படிக் கேட்கவேண்டியதாம். அவள் அவனை மணம் செய்ய இஷ்டப்பட்டால் அப்பாலை அவனிடத்திலிருந்து வாங்கி தன்னுடைய வாயில் ஊற்றிக்கொண்டு அப்புருஷன் தேஹத்தின்மீது கோப்பளித்து உமிழ வேண்டுமாம். அவள் அப்படி செய்யாவிட்டால் அவளுக்கு மணஞ்செய்ய இஷ்டமில்லை என்று நினைத்து அப்புருஷன் போய்விட வேண்டுமாம்.

9. இரண்டாயிரம் காலன் நிறையுள்ள எண்ணெயானது சாதாரணமாக ஒரு திமிங்கிலத்திலிருந்து இறக்கப்படுகிறதாம்.

10. இங்கிலாந்தில் ஆயிரத்து ஐந்நூற்று எண்பத்து எழு ஸ்திரீ மாஜிஸ்ட்ரேட்டுகள் இருக்கிறார்களாம்.

S. A. ஸ்ரீனிவாஸ சர்மா.

## தமிழும் சீனமும்.

தமிழும் சீனரின் பாஷையும் ஒத்திருக்கின்றன. தமிழில் 'நீ' என்னும் மொழிக்கு சீனத்தில் 'நீ' யென்றே வழங்குவர். நான் என்பதற்கு 'ஞான்' என்றும், 'யாம்' என்பதற்கு 'யாம்' என்றும், 'பெண்' என்பதற்குப் 'பேண்' என்றும், 'எஃகு' என்பதற்கு 'எஃ' என்றும், 'மை' என்பதற்கு 'ஊமை' என்றும், 'கண்' (இடம்) என்பதற்கு 'கண்' என்றும், இரண்டு என்பதற்கு 'ஈர்' என்றும் வழங்குவர்.

# இன்ப வாழ்வு



இறைவன் அருளால் தோன்றிய உயிர்களின் வாழ்வு நோக்கம் இன்ப நிலை யெய்துதலாகும். இன்ப நிலை யெனினும், இறைநிலை யெனினும், வீடுபேறெனினும், ஒக்கும். இன்பமே அன்பென்பதும், அன்பே ஆண்டவனென்பதும் அறிந்ததொன்று. இன்பமில்லாத விடத்து அன்பும், அன்பில்லா விடத்து இன்பமும் நிகழ்தலில்லை. இவை யிரண்டும் மணியினது ஒளியும், மலரினது மணமும், சந்தனத்து வாசனையும் போல ஒன்றற்கொன்று தொடர்புடையன. இவ்விரண்டுங் கலந்த ஒன்றே இறைவன் என்பது. "அன்பே சிவம்" என்னும் அருள் மொழி நோக்குக. ஆண்டவன் அருட்பெருக்கால் தோற்றுவித்த உயிர்கள் அன்புமயமாக வாழ்ந்து, அவ்வன்பு நிலைபெறுதலே அவ்விறைவனது விருப்பம்.

விலங்கு, பறவை முதலியவற்றிற்கில்லாத, பகுத்தறிவைச் சிறப்பாகப் பெற்ற நாமே தற்பொழுது ஆண்டவன் அருட்செயலை மறந்து, தன்னலமிகுந்து, அதனால் அழுக்காறு, அவா, வெகுளி முதலிய தளைகளிற் சிக்கி அல்லற்படுகின்றோம். எத்துணைபேர் அத்துன்பக் கட்டினின்றும் நீங்க வகையறியாது, "வாழ்வாவது மாயம், இது மண்ணாவது திண்ணம்" என்றும், "காயமாவது பொய்யடா, வெறுங் காற்றடைந்த பையடா" என்றும், வரும் ஆன்றோர் மொழிகளைத் தமது இழிந்த நிலைமைக்கு இலக்காக்கி, மக்கட் பிறவியை மாயை, சடம், மித்தை எனப் பேசித் திரிகின்றனர். அவர்கள் பேச்சளவில் நிற்கின்றனரே யன்றி செயலளவில் யாதும் புரிகின்றாரில்லை. ஆனால் ஒன்று இயற்றுகின்றனர். அதுதான் மயிரைச் சடைசடையாகத் திரட்டி நீட்டிக்கொள்ளல்; அல்லது மழுங்க மொட்டையடித்துக் கொள்ளல். "இறைவன் திருக்கோவிலை அடைவதற்கு முதற்படி இதுவே; இத்தவப்படியை அடையாதார் இறைவன் அருளை அடைய இயலாது" என்பது அவர்கள் நினைவு போலும்! அன்புக்கு மாறுபாடான அழுக்காறு, அவா, வெகுளி முதலிய மனமாசு கழியப் பெறுதார் அவ்வன்பு நிலையை அடைவதெங்ஙனம்? அழுக்காறு முதலிய மனமாசு அகற்றி நடாத்துவோரின் வாழ்வே இன்ப வாழ்வாகும். செவ்வாடை புனைதலும், காட்டிற்கோடி மூக்கைப் பிடித்தலும் மனமாசு அகற்ற வழியாகா. மனைவியோடுறைந்து, மக்கட்பேறெய்தி, இறைநெறி நின்று வாழ்தலே மனமாசு அகற்றும் வழியாகும். அதுவே இன்ப வாழ்வாகும்; தவமுமாகும்.

"ஆணோடு பெண்ணோடு பிறக்கவில்லையா?" "பிள்ளையில்லாப் பாவி" என வரும் நம் நாட்டின் முதுமொழிகள் யாரைக் குறிக்கின்றன?

அன்பு மலராத கடின மனத்தையுடைய ஒருவனையன்றோ? தன்னலமே கருதி வாழ்ந்த ஒருவன் ஒருத்தியை வாழ்க்கைத்துணையாகக் கொண்டதும் தன்னல மறந்து, அவள் நலத்தை நாடுகிறன். அவளுக்கு ஒரு நோய்வரின், அந்நோய் தனக்கு வந்ததாகக் கருதி இடர்ப்படுகிறான். அவள் ஒரு நன்மை யடையின், அதைத் தானே அடைந்ததாகப் பெருமகிழ்வெய்துகிறான். இங்ஙனம் இருவரிடத்தில் கட்டுப்பட்டு நின்ற அன்பு பின்னர் இவர்களிடத்து உதிக்கும் மக்கள் மூலமாக உலகமுழுவதும் பரவத்தொடங்குகிறது. "ஊரார் பிள்ளையை ஊட்டிவளர்த்தால் தன்பிள்ளை தானேவளரும்" அல்லவா? அங் ஙனமன்றி ஒருவன் தன் நலம், தன் மனைவி மக்கள் நலம்மட்டுங் கருதி, பிற ரை மதியாது வாழ்வானாயின், அவன் வாழ்க்கை மற்றவர்களின் பராமுகத்தால், பழிப்புரையால், பகைமையால் பாழ்படத் தொடங்குகிறது. 'ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்" என்பது அநுபவ மொழி. தன்னலம், தன் மனைவி மக்கள் நலங்கருதியாவது பிறர்க்கு நன்மை செய்தே யாகவேண் டும். ஆகவே, இவ்விடத்திலும் தன்னலத்தைக் காட்டிலும் பிறர் நலமே முதன்மை பெற்று நிற்கின்றது. பிறர் நலம் முதன்மை பெற்று நிற்குமிடத்து அன்பில்லாதிருக்குமோ? அன்பு முற்றியபொழுதுதான் பிறர் நலத்திலும் நாட்டம் செல்கிறது.

"அன்போடு இயைந்த வழக்கென்ப, ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு"

"இன்சொல் விளைநிலனா ஈதலே வித்தாக
வன்சொல் களைகட்டு வாய்மை எரு அட்டி
அன்புநீர் பாய்ச்சி அறக்கதிர்ஈன ஓர்
பைங்கூழ் சிறுகாலைச் செய்"

[இனிய சொற்களே விளையத்தக்க நிலமாகவும், இரப்போருக்குக் கொடுத்தலே அந்நிலத்தில் விதைக்கும் விதையாகவும், கடுஞ்சொல்லாகுங் களையைப் பிடுங்கி, உண்மையாகிய எருவைப்போட்டு, அன்பாகிய நீரை இறைத்து, தரு மம் என்னுங் கதிரைக் கொடுக்கும்படி ஒப்பற்ற பயிரை இளமையிலேயே செய்.] என்பன ஆன்றோர் மொழிகள்.

உண்ண உணவும், உடுக்கத் துணியும், படுக்கப் பாயும் இன்றி ஒரு வன் பரிதபித்திருக்க; விலாப்புடைக்கத் தின்று பட்டாடை புனைந்து ஆடம்பரமாக வெளிவருபவர் எத்தனை பெயர்? ஆனால் அவர்கள் வாழ்க்கை யில் இன்பம் நிலவுகிறதா? வெளிவேடத்தைக் கொண்டு ஒருவரின் வாழ்க் கையை இன்பமென்றும் துன்பமென்றுங் குறிக்க இயலாது. மிகச் சிறிய ஏழையைக் காட்டிலும், மிகப் பெரிய செல்வனே அதிக துன்பம் அநுபவிக்கி றான். வெயிலிலும், மழையிலும், காற்றிலும், பனியிலும் உடலை வருத்தி உழைப்பதைத் துன்பமென்றும்; உலகமே இன்னதென்றறியாது, பாலன்னம் புசித்துப் பஞ்சணையில் உறங்குவதை இன்பமென்றுங் கொள்ளலாகாது. இன்பமும் துன்பமும் அவரவர் மன நிலையைப் பொறுத்து நிற்கிறது. ஏழை தான் ஓர் கோடீசுவரன் ஆதல் கூடும் எனக் கனவிலுங் கருதான். உண

---

பார்க்காமல் ஒன்றையும் குடிக்காதே, படிக்காமல் ஒன்றிலும் கையெழுத் துப் போடாதே. உன்னைப் புகழ்பவர்களை என்றைக்கும் நம்பாதே.

வும், உடையும் கிடைப்பின் போதும் எனக்கருதி அமைதியடைகிறான். என்றாவது ஒருநாள் ஒருவேளைச் சோற்றுக்கும் பஞ்சம் ஏற்படின், அதற்காக அவன் கண்ணீர் சிந்துவதில்லை. வெறும் நீரை உப்பு கலந்து பருகிவிட்டு உற்சாகத்தோடு கிளம்புகிறான் உழைப்பதற்கு. அவனிடத்து நோயும் பிறவும் அணுக அஞ்சுகிறது. அவன் எல்லாரிடத்தும் அன்புமயமாக விளங்குகிறான். தன்னைக் கடிந்து விழும் எசமானனிடத்தும் அன்பு செலுத்துகிறன்.

மனிதப்பிறவிபெற்ற ஆண் பெண் இருபாலாரும் தம்முட் சேர்ந்து வாழும் வாழ்க்கையே கடவுள் நெறியாகும்; இன்பவாழ்க்கையாகும் அதுவே இல்வாழ்க்கை என்றும் வழங்கப்படும். இன்பவாழ்வு எனினும் இல்வாழ்வு எனினும் இரண்டும் ஒன்றே. இன்பவாழ்வாகிய இவ்வில்வாழ்வு தற்பொழுது இன்பவாழ்வாக விளங்குகிறதா? இல்லையே; துன்பவாழ்வாகவன்றோ தோன்றுகிறது. அன்றன்றைய உணவிற்கு அன்றன்று உழைத்த பொருளைக் கொண்டு காலங்கடத்தும் ஒரு ஏழையின் வாழ்க்கை முதற்கொண்டு, ஒரே நாளில் ஆயிரம் ஆயிரமாகப் பொருள் குவிக்கும் செல்வன் வாழ்க்கை யிறுதியாகத் துன்பமே நிறைந்திருக்கிறது. காரணம் என்ன? "அன்பர் பணி செய்ய என்னை ஆளாக்கி விட்டு விட்டால், இன்ப நிலை தானே வந்தெய்தும் பராபரமே" என்பது போலவும், "எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி இரங்கவும் நின், தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே" என்பது போலவும், பிறர்க்கு உழைக்கப் புகுகையில் தான் நாம் இன்ப வாழ்வு காணுதல் கூடுமானதாகின்றது.

(தொடரும்)

பெ. இராமாநுஜ ரெட்டியார்.



வேறு வேறாக நினைக்கையில் தான் ஆவல். ஒன்றாகி எண்ணுகையிலோ சாந்தமாம். ஒரு பெண்ணை விரும்புவோன் அப்பெண்ணுருவாகவே ஆகிவிடில், அவளை விரும்பிய அவா தணிந்துவிடும். இவ்விதமே, ஒரு சுந்தரியைத் தன்னில் ஒரு பாதியாய் விவாகத்தால் பெற்று ஓர் உருவாய் விட்டதும் முன்பு அதற்கென்று கொண்ட ஆவல் தணிந்து சாந்தமாய் விடுகிறது! ஒன்றாகிய பின் ஏக்கமில்லை!

## இயற்கை—செயற்கை

"செயற்கைப் பொருள்கள் செய்வான் வேண்டின்
இயற்கைப் பொருளினின் றியக்கல் வேண்டும்.
இயற்கைப் பொருள்க ளில வேல்
செயற்கைப் பொருள்களு மிலவே யாகும்,
குடம் வேண்டின் மண் வேண்டும்,
மண் ணின்றேற் குட மில்லை."

# ஆசிரியருக்குக் கடிதங்கள்

## I



மதுரையிலிருந்து தஞ்சாவூருக்குச் செல்லும் வண்டியில் ஓர் இரவு நான் பிரயாணம் செய்கையில் கண்ட காட்சி இது. வண்டியில் ஜன நெருக்கம் அதிகம். பெஞ்சியில் படுத்திருந்தவரை எழுப்பி விட்டு அவர் பக்கத்தில் ஒருவர் வந்து உட்கார்ந்தார். படுத்திருந்தவரோ தமது தூக்கத்தை விடாமல் அவர் மீது விழுந்து விழுந்து உட்கார்ந்தபடி 'நித்திரையாட்டம்' ஆடினார். இந்தத் தூங்கு மூஞ்சியுடன் இருந்தவர்கள் 'வந்தவர்' உட்கார்ந்ததற்காகச் சிடு சிடுத்தனர். இவ்வளவையும் வந்தவர் பொறுத்து நின்றார். பலகணிக் கருகில் எவர் உட்காருகின்றனரோ அவர்களுக்குத்தான் ஜன்னலை மூடவும் திறக்கவும் அதன் மேற் சாய்ந்து கொள்ளவும் சுதந்திர முண்டாம்! ஒரு ஸ்டேஷனில் ஒன்று வாங்க "வந்தவர்" ஜன்னலைத் திறக்கும்படி வேண்டினார். 'ஓ! முடியாது' என்று விட்டனர். "வந்தவ"ருக்கோ பசி! அடுத்த ஸ்டேஷனில் எழுந்து வேறொரு பலகணியருகிற் சென்று மூன்று இட்டிலியும் காபியும் வாங்கிக்கொண்டு தமது இடத்திற்கு வந்தார். அங்கே அதற்குள் வேறொருவர் தமது சாக்கு மூட்டையுடன் வந்து உட்கார்ந்து கொண்டார். இதைப் பார்த்து "வந்தவர்" ஐயா, இது என் இடம் எழுந்திருங்கள் என்றார். உட்கார்ந்தவரோ அவ்விடத்தை விட்டு அசையவேயில்லை. எவ்வளவு வேண்டியும், கையிலுள்ள ஆகாரத்தைப் புசிக்கும் வரையிலாவது இடம் தருமாறு கெஞ்சியும் அவர் இணங்கவில்லை. எங்கேயாவது போ என்றார். ஒரு கையில் இட்டிலி, மற்றொரு கையில் காபி! பசித்தவன் தன் உணவைப் புசிக்கச் சிறிது இடம் கேட்கிறான். அங்கிருந்த எவரும் "வந்தவர்" பக்கம் பேசவேயில்லை. அதன்பின் "வந்தவர்" தனது முரட்டுத்தனத்தைக் காண்பித்துக்கொண்டு இருவர் இருந்த அந்த பெஞ்சியின் நடுவில் தமது தேகத்தை நுழைத்துக் குந்தினார். இட்டிலியும் புசித்து, காபியும் அருந்தினார். இதன் இடையில் "உட்கார்ந்தவர்" தமது வெற்றிலைப் பெட்டியைத் திறந்து எல்லோருக்கும் தாம்பூலம் வழங்கினார். இதுவும் ஒரு தந்திரமே. தன் மீது அநியாயம் இருக்கையில், அதை மற்றவர் மறந்து நினையாதிருக்கும்படி செய்ய இது ஒரு நல்ல 'சொக்கு பொடி'தான்! 'உட்கார்ந்தவர்' ஒரு பலசாலியானதாலும், அவர் தந்த தாம்பூலத்தாலும் வண்டியிலிருந்தவர்களெல்லாம் அவர் பக்கமே சேர்ந்து கொண்டனர். "வந்தவர்" பக்கம் பரிந்து பேசுவார் எவருமில்லை! பின்பு நடக்கிற கதையோ! "உட்கார்ந்தவ"ரும், ஜன்னல் பக்கம் ஏற்கெனவே இருந்தவருமாக இவ்விருவரும் தூங்கி விழ ஆரம்பித்து, "வந்தவர்"மீது மோதி மோதி விழுந்து 'நித்திரையாட்டம்' ஆடத் தொடங்கினர். "வந்தவர்"

---

குடியிருக்க இடம் பார்ப்பதற்கு முன் அக்கம்பக்கத்திலுள்ளவர்கள் நல்லவர்களா; என்பதை விசாரி. அவர்களின் உதவியும் வேண்டியிருக்கும்.

என்ன செய்வார்? தமது பக்கமோ இரங்கிப் பேசுவோரில்லை; நியாயம் சொல்லுவோருமில்லை. எல்லாம் பலவான் பக்கமே வீச்சாக இருக்கிறது! அந்த சமயம் அடுத்த பெஞ்சு காலியாகவே, அங்குபோய் அப்படா வென்று குந்தினர். அத்துடன் அவரைப் பிடித்த சனியன் தீர்ந்தது.

இனி, இவரை ஹிம்ஸித்தவர்களுக்கு நேரும் சனியனைக் கேளுங்கள். அந்த இருவரும் தங்கள் 'நித்திரை யாட்ட'த்தில் ஒருவருக்கொருவர் நன்ருக மோதிக் கொண்டு, பிறகு இருவரும் பெஞ்சியைவிட்டுக் கீழே படுத்து நன்ருக உறங்கினர். அடுத்த ஸ்டேஷனில் காலியாக இருந்த அந்தப் பெஞ்சில் இரு இஸ்லாமியர்கள் வந்து உட்கார்ந்து கொண்டனர். பிறகு சிறிது நேரத்திற்கெல்லாம் தூங்கிய இருவரும் விழித்துக்கொண்டு தமது இடத்தில் உட்காரப்போக, அங்கே யிருந்த இரு இஸ்லாமியரையும் கண்டு, "ஓ! இது எங்கள் இடம், எழுந்திருங்கள்" என்றனர். இந்த 'பூச்சி' காட்டுவதற்கெல்லாம் இஸ்லாமியர் பயந்துவிடுவரா? அவர்கள் அசையவேயில்லை. அவர்களை எதிர்க்கவும் முடியவில்லை. இவ்விருவரை விட அவர்கள் பலசாலிகள்! தூங்கு மூஞ்சிகள் இருவரும் பல ஸ்டேஷன்கள் வரைக்கும் நின்றுகொண்டே தவித்தனர். இவற்றைப் பார்த்து வேறொரு பெஞ்சியிலிருந்த "வந்தவர்" ஆ! அதற்குள் என்னை வருத்தியதற்குப் பதிலுக்குப் பதில் இவர்களுக்குக் கிடைத்துவிட்டதே என்று வியப்பும் சிரிப்பும் கொண்டு இஸ்லாமியரிடம் தம்மை அத்தூங்கு மூஞ்சிகள் படுத்திய பாட்டையும், கையிலிருக்கும் உணவு வாய்க்குள் போவதற்குக்கூட அவர்கள் இடம் தராததையும் எடுத்துக்கூறி அக்கிரமத்திற்குத்தக்க, 'பூசை' தான் இது என்று தெரிவித்தார். இஸ்லாமியர் இதைக் கேட்டுப் புன்னகை கொண்டு "வந்தவ"ருடன் வெகு பிரியமாய்ப் பேசத் தொடங்கி இம்மூவரும் ஒன்ருய் விட்டனர். "வந்தவர்" இவ்விதம் ஒய்யாரமாய் உட்கார்ந்து தமது இடத்தைப் பற்றிக்கொண்டவர்களுடன் குலாவி நிற்பதை, 'அவரை' வருத்திய தூங்கு மூஞ்சிகள் இருவரும் கண்டு நாணி நின்றனர். இந்த ஸம்பவம் "முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்" என்பதற்குப் பொருத்தமான ஒரு அநுபவக் காட்சியாக இருந்தாலும், ஒரு அற்ப விஷயத்திலிருந்துங் கூடப் பெரியதோர் ஞானத்தையும்—பக்குவமான ஒரு சிறந்த அநுபவத்தையும் உணரலாமானதாலும், உலகின்கண் நிகழும் சண்டை சச்சரவுகளின் முடிவும் நியாயத்தின் பக்கமே யானதாலும் இதை வரைவதானேன்.

S. R. வேணுகோபாலன்.

## II

ஐயா!

தாங்கள் அனுப்பிவரும் ஆநந்தகுணபோதினியின் இதழ்களைப் படித்து விஷயங்களின் ரசத்தை யுணர்ந்து மகிழ்ச்சி அடைந்தேன். இவ்வரிய பத்திரிகை தமிழுலகத்தாருக்கு உற்ற துணையா யிருக்கு மென்பதில் சந்தேகமில்லை. நம் "போதினியில்" நான் அடைந்த உற்சாகத்தையும், பிரதி தமிழ் மாத முதல் இரண்டு வாரங்களிலும் எனது வீட்டிலுள்ளவர்கள் "ஆநந்த குண போதினி வந்துவிட்டதா? ஆநந்த குணபோதினி வந்து

---

ஒணானைப் பிடிப்பதற்காக மரத்தை வெட்டலாகாது. உன் ஆசையைத் திருப்தி செய்வதற்காக இன்னொன்றின் வாழ்ட்சுகத்தைப் பாழ்படுத்தாதே.

விட்டதா ?" என்று வினவுவதுமே இச்சஞ்சிகையின் ஆற்றலை நன்கு விளக்குகின்றது. இங்ஙனமாக நற்றெண்டு இயற்றி வரும் நமது "போதினி" ஒவ்வொரு தமிழரகத்திலும் உலாவ வேண்டுமென்பது எனது பேரவா. ஆகவே, இத்துடன் நான்கு புதிய சந்தாதாரர்களின் விலாஸமும் அனுப்பி இருக்கிறேன். சித்திரை மாதத்திலிருந்து அவர்களுக்குப் பத்திரிகை அனுப்பி வரவும். எனது தந்தை நமது "போதினி"யைப் படித்துப் பார்த்து ஆநந்தம் கொண்டதாக என்மூலம் தங்களுக்கு அறிக்கை செய்யச் சொன்னதுடன், பத்திராசிரியரைப் பார்க்கப் பிரியமாயிருப்பதால் அவருடைய உருவப் படம் ஒன்றை அனுப்பும்படிக்கும் எழுதச்சொல்லி இருப்பதால் ஒரு படம் கூடுமானால் அனுப்பி வைக்கவும்.

உன்னவலரை

இன்புற்று வாழப் பார்ப்போம். உலகுக்கு நலம் புரிந்து நலமாக இருப்போம். கசப்பு, சினம், மீறுகை, ஆத்திரம் இவைகளெல்லாம் ஏனோ? எங்கும் அன்பு காண்போம். எவ்விடத்தும் ஆநந்தமாய் உயர உயரப் பறப்போம். வேற்றுமையிலே விஷமமும், ஆயாஸமுமன்றி தித்திப்பான பாயாஸம் ஏது? காசு இல்லையே என்ற கவலை ஏன்? கடவுள் கொடுப்பாரென்று நம்பி விடுவோம். நம்பினவர்கட்கு அவர் படியளப்பார்.

அநுபவமே உருவாயமைந்து இலக்கும் அன்பிற்கினிய பத்திராசிரியர் அவர்களுக்கு எனது நன்றியறிதலான வந்தனம் செலுத்தவும். அவரால் நடத்தப் பெறும் நமது "ஆநந்த குண போதினி" மேலும்மேலும் அதிக சிறப்புடன் நீடூழிகாலம் நிலவுமாறு எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிவாராக.

என்னால் இயன்ற தொண்டு புரியச் சித்தமாக இருக்கும்

இராமாநுஜன்.

(சந்தா நெ. 260) பினங்கு.

## தமிழ்ச் சங்கம்.

இரண்டாவது தமிழ்ச் சங்கம் தோன்றியபின், அதற்கு முன்னிருந்ததைத் தலைச்சங்கம் என்றனர். மூன்றுவது முறை ஏற்பட்ட தமிழ்ச் சங்கத்தால் அதற்கு முன்னிருந்ததை இடைச்சங்கம் என்றனர். மூன்றுவது தமிழ்ச் சங்கத்திற்குப் பிறது வேறு சங்கமில்லையாதலின் இதனைக் கடைச் சங்கம் என்றனர். தமிழ்ச் சங்கம் இடைவிடாது தொடர்ந்து நடந்திருப்பின் இம்மூன்று பேதப்பெயர்கள் ஏற்படாவாம்.

# தமிழ்! தமிழ்!! தமிழ்!!!

(ஸ்ரீமான் மாறல். கார்த்திகேய முதலியார் அவர்கள்.)



தமிழர்கள் பெரிதும் பற்றுவைத்துத் தமிழ் நூலைக் கற்றல் வேண்டும். ஏனையோரும் அதனை யிகழாது கற்றல் நன்றே. புகழ் நிமித்தமாகவும், பொருள் நிமித்தமாகவும் தமிழ் நூல் கற்றல் கூடாது. பதி பசு பாச இலக்கணங்களை அறிதற் பொருட்டே கற்றல் வேண்டும். தமிழ் கற்றோர், கற்கின்றோர், கற்போர் இவர்கள்பால் அன்புடையனுக. வறியனுயினும் தமிழ் கற்க; கற்பிக்க. செல்வனுயினும் கற்க; கற்பிக்க. தமிழ் முன்னே நீ கற்க, பின் மகனுக்குக் கற்பிக்க. தமிழ் கற்க விரும்புவோன் பகைவனுயினும், பகை தணித்துக் கொண்டு கற்பித்தல் வேண்டும். எவ்வெவ்விடங்களில் கூடுமோ அவ்வவ்விடங்களிலெல்லாம் கற்பித்தல் வேண்டும். எவ்வளவு கூடுமோ அவ்வளவு கற்க; கற்பிக்க. கேட்க; கேட்பிக்க. ஆங்கில சங்க மொழிந்த மற்றைய சங்கங்களிலெல்லாம் தமிழே பேசுக; ஆங்கிலம் பேசற்க. இடையிடையே ஆங்கிலங் கலந்தும் பேசற்க. ஆங்கிலப் பெரியோர்க்கு உண்மை யெடுத்தினிது கூறி நாட்டிற்கு நன்மை செய்யும் பொருட்டு ஆங்கிலங்கற்றல் வேண்டும். புகழ் நிமித்தமாகவும், பொருள் நிமித்தமாகவும் ஆங்கிலங் கற்றல் அவ்வளவு சிறப்பாகாது. முன்னே தமிழும், பின் ஆரியமும், அதன்பின் ஆங்கில முதலியனவும் கற்க; கற்பிக்க.

அரசனுக வரினும், அமைச்சனுக வரினும், மடபதியாக வரினும், தக்க இடங்களில் தமிழ்க் கல்லூரி நாட்டி நடாத்துக. இச்சூழ்ச்சியைச் சிறிது மறவற்க.

மக்களில்லையென்று கவலையின் மூழ்கிக் கண்ணீர் விடற்க. அப் பொருளை ஓர் முதலாக வைத்து ஓர் தமிழ்க் கழகம் நிலை நாட்டி நடாத்தி வரின் அம்மாணவரெல்லாம் நினக்கு வழி வழி நன்மக்களாவர். ஸ்ரீமான் பச்சையப்ப முதலியார், ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் முதலோர் இத்தகையோராவர். இச்சூழ்ச்சியைச் சிறிது மறவற்க.

தமிழ்ப் புலவர்க்கு இயன்றவரை பொருளுதவி செய்க; செய்யாதிருக்கற்க, கலியாண முதலியவற்றில் தமிழ்ப் புலவர்க்கு மரியாதை செய்க.

எப்பொழுதும் தமிழையே தெய்வம் போலவும், நற்றாய் போலவும் சிந்திக்க; நீ தமிழ் மயமாவை. நின் மக்களும் தமிழ் மயமாவர். நின் குடியும் தமிழ் மயமாகும். ஊரும் தமிழ் மயமாம்.

"உள்ளுவ தெல்லா முயர் வுள்ளல்"

இச்சூழ்ச்சியைச் சிறிது மறவற்க.

நின் கை தமிழ்நூல் எழுதுக. நின் வாய் தமிழையே பேசுக, நின் மனம் தமிழையே சிந்திக்க. நோய்கொண்டு மெலியனுயின் மருந்துண்டு வலியனுகித் தமிழ் கற்க.

நீர்க்குமிழிக்குப் பொற்பூண் கட்டமுயல்வதுபோல யாக்கைப் பயனென்றே கருதி அலையற்க.

சில கணமேனும் தமிழ் நூல் கற்க.
சில கணமேனும் கடவுளைப் போற்றுக.
"தவத்துக் கொருவர் தமிழுக்கிருவர்"
இச்சூழ்ச்சியைச் சிறிது மறவற்க.

திருமுறைக்கூடம் நாட்டித் தமிழ் நூலையும் பிற நூல்களையும் போற்றுக. மற்றைய பாஷைகளையும் இகழற்க.

"நகை, யீகை, யின்சொல், இகழாமை நான்கும்
வகை யென்ப வாய்மைக் குடிக்கு." (திருக்குறள்)

## புதிய கருத்து எழும் வேளை!

ஒரு நூலை ஆக்குவதற்கு முயன்றிடுங்கையில் அதற்கான கருத்துகள் ஏக காலத்தில் தோன்றி விடுவதில்லை. அவ்வப் போது பல காலங்களில் அந்த நூலுக்கான யோசனைகள் உதிக்கலாம். அதன் சார்பாக ஆராய்ச்சி செய்யும் வழியில் சில கருத்துகள் தோற்றும். சில வெறுமனே இருக்கும் சமயம் தோற்றும். பிறரோடு பேசுங்கால் சில தோற்றும். சில கருத்துகள் கனவிலும் தோற்றும். சில ஒன்றை வாசிக்குங்கால் தோன்றும். சில பிறருக்கு ஒன்றைச் சொல்லுங்கால் தோன்றும். சில வழி நடக்குங்கால் தோன்றும். சில ஒரு சம்பவத்தினின்றும் தோன்றும். அவற்றை எல்லாம் உடனுக்குடன் குறித்துக் கொள்ளா விடில் அப்பொழுதே மறைந்தே விடும். கனவிற் கண்டதை விழித்தவுடனே எழுதிவிடவேண்டும். அங்ஙனம் எழுதும் நேரத்திற்குள் மறந்துபோனவையும் பல. அவ்விதம் மறந் தமைக்கு வருந்துகையில் சில கருத்துகள் மறைவிலிருந்தும் எதிர் தோற்றும். சில அச்சமயம் தோற்ருமலே போய் பின்னெரு சமயம் சும்மா இருக்கையில் எதிர்படும். தோன் றவே தோன்ருது ஒழிந்தனவும் பல உள. சில, நூல் அச் சிட்டு ஆன பின்பும் தோற்றும். அப்போது தோற்றி என் செய்ய? நூல் ஆக்குதலும், பத்திரிகை நடத்துதலுமான இவையெல்லாம் இங்ஙனம் பலவகையில் தோற்றும் கருத்து களைக் கொண்டே ஒரு தனி உருவாய் ஆவதாம்.

# முற்றும் துறந்த ஓர் முனிவரின் மதி (Parnell's Hermit) மயக்கம்

**குறிப்பு :—**"ஹேர்மிட்" என்ற இவ்வாங்கிலக் கதையைத் தமிழ்ப் பாவினமாய் "முற்றும் துறந்த ஓர் முனிவரின் மதிமயக்கம்" என்ற பெயருடன் இங்கு மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இது மாணவர்கட்குப் பெரிதும் பயன் தரவல்லது. முதலில் கதையின் வாலாற்றைத் தெரிந்து கொண்டால் தமிழ் விருத்தங்களின் பொருள் சுலபமாய் விளங்கும். அதைக்கொண்டு ஆங்கிலப் பாவினங்களையும் எளிதில் உணரக் கூடும்.

**கதையின் வரலாறு :—**அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருஷார்த்தங்கள் நான்கினுக்கும் விளைநில மெனப்படும் இளமையிலேயே துறவியான ஓர் முனிவர் நிர்மானுஷியமான ஓர் வனத்திலே நீண்ட காலம் வீற்றிருக்குங்கால், சத்துவ பதார்த்தங்களே உணவாகவும், ஈச்வரத்தியானமே யாத்திரையாகவும் செல்லா நிற்க,—இவ்வுலகின் கண் நல்லோர் கீழடங்கி வருந்துவதாயும், தீயோர் மேலோங்கி வாழ்வதாயும்—தன் குகையை அணுகின சில ஆட்டிடையர்களால் சொல்லக் கேட்டு மதிமயங்கி, கடவுளோ நியாய ஸ்வரூபி. அவர் உண்டென்பது திண்ணமாகில் மேற்குறித்தவண்ணம் தட்டு மாறி நடவாதெனச் சந்தேகமுற்று நாஸ்திகனாய், கடவுளே இல்லையெனின் தான் கருதியிருக்கும் புருஷார்த்தமும் இல்லையென நினைத்ததும் முன்னிருந்த மன சமாதானமும் சுகமும் கெட்டு துர்ப்பாக்கியமான நிலையை யடைந்ததால், தானே உலகிற் புகுந்து தெளியவேண்டுமெனப் புறப்பட்டார்.

அக்கணமே கன்றுக்கு இரங்கும் கறவைபோல் கடவுள் இரங்கி அம் முனிவரது சந்தேகம் தெளியும் வண்ணம் ஒரு தேவதூதனை மண்ணுட்டுக்கு நியமிக்க, அத்தேவதூதன் ஓர் மானிடச் சிறுவனாகி முனிவர் முன்னே தோன்றினான். ஒருவருக்கொருவர் ஆசி கூறிக்கொண்டு இருவர் மனமும் ஒன்றுபட்டு நட்பு மிகுந்தனர். இவ்விருவருமாகப் புறப்பட்டுச் செல்லுங்கால் சூரியன் அஸ்தமித்ததினால், கீர்த்தியையே நாடிப் பரதேசிகளை உபசரிக்கும் ஒரு பிரபுவின் மாளிகையைச் சேர்ந்தார்கள். மறுநாட் பகலில் குபேர ஸம்பத்தையுடைய ஓர் பரமலோபியின் வீட்டைக் கிட்டினார்கள். பின்பு தெய்வபக்தியுள்ள ஓர் நல்லோனது மனையை யடைந்தார்கள். இம்மூன்றிடங்களிலும் நடந்த வரலாறுகளைக் கண்ணுற்ற முனிவர் திடுக்கிட்டு வாய் விட்டலறுமுன் பொய்ச் சிறுவன் தன் தேவ சரீரத்துடன் விளங்கவும், முனிவர் வியப்புற்று நாவெழாமல் நின்றார். தேவதூதன் கீழ் நடந்த ஒவ்வொரு வரலாற்றின் உண்மையை முனிவருக்கு அறிவித்தும், சகல அண்டங்களுக்கும் நாதனான சர்வஞ்ஞன் மானிடர் கண்கட்குப் புறம்பாய் அவரவர் வினைப்படி தனிக்கோலோச்சுவதால், தெய்வச் செயல்களெல்லாம் மனிதர் சிற்றறிவுக்கு எட்டுமவையல்ல——என்று தெளியும் வண்ணம் முனிவருக்குப் போதனை புரிந்து பொன்னுட்டுக் கேகினான். முனிவரும் தன் மயக்கம் தெளிந்து, ஐயம் நீங்கி, தன் குகையை யடைந்து முன்போல் தெய்வத்தியான பரவசராகி இன்புற்று விளங்கினர்.

# The Hermit

" தீமை நன்மையினைச் செயிப்பதும், நன்மை தீமைக்குள் இணங்கிவாடுவதும்—ஆமிதற்காய காரணம் யாது ?

For in a wild, unknown to public view,
From youth to age a reverend hermit grew ;
The most his bed, the cave his humble call,
His food the fruits, his drink the crystal well.

எழசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

நீர்மலி உலகில் அறிவதற்கரிய
நெடுவனந்தனி லொரு முனிவன்
சீர்மலிந்திடுந்தன் இளமையே முதலாய்ச்
செவ்வியோடினிது வீற்றிருந்தான்
பேர்மலி அன்னோன் சயனமோ சிறுபுல்;
பெருமையாய் வாழ்ந்திடுங் குடிசை
நார்மலி குகை; ஆகாரமோ பழங்கள்;
நாடியபான மூஞ்சலமே. (1)

(தொடரும்.)

---

விருந்தாளி சொற்பபணம் கேட்பின் அது தருவதற்கு மனம் கஷ்டப்படுகிறது. ஆனால் அவனே இன்னும் பத்து தினங்கட்குத் தங்கிச் செல்வதாயிருப்பினும், அந்தச் செலவு ஒரு செலவாக, கணக்காக, மனதிற் படுவதில்லை. பிறர் பசி போக்கவே மனம் முந்துகிறது. ஆனல், காசு தரவோ சம்மதப்படுவதில்லை. இடும் உணவைப் பணமாகக் கணக்கிடுவோர் எங்கோ அன்பற்ற ஒரு சிலரே.

எண்ணம் நல்லதாக இருக்கலாம், அதை சதா சொல்லிக்கொண்டும் இருக்கலாம், அவனுக்கேதான் என் சொத்துக்கள் எல்லாம் கொடுக்கப் போகிறேன் என்றும் சொல்லலாம். ஆனல், அந்த நல்ல எண்ணத்தை உபயோகிக்கச் சரியான நேரம் கிடைக்கவேண்டும். அந்த நேரத்தை உண்டாக்குபவர் கடவுள். அந்த நேரம்உண்டாகிறதோ என்னவோ—அவர் செயல் !




## 1. அன்பு

(2-ம் கமலம் 632-ம் பக்கத் தொடர்ச்சி.)

**94. அத்தை மகள், அம்மான் மகள் சொந்தம் போல.**

இது வெகு ருசியுள்ள பழமொழி. அநுபவித்துப் பார்த்தவர்களுக்கு இதன் சுவை தெரியும். அத்தை மகள், அம்மான் மகள் என்னும்போதே எவ்வளவு பரவசம் உண்டாகின்றது! எவ்வளவு சொந்தத்தோடும் மனவொற்றுமையோடும் அந்தப் பதங்களைச் சொல்லுகிறோம்! ஒரே இரத்த சம்பந்தம் கொண்டவர்களல்லவா இவர்கள்? அத்தை யென்று எல்லோரையும் சொல்லிவிட முடியுமா? தன் தந்தையுடன் ஒரு தாய் வயிற்றுப் பெண்ணாகப் பிறந்திருந்தால் மட்டும் தான் 'அத்தை' யென்று அழைக்க முடியும். அவ்விதமே தன் தாயுடன் கூடப் பிறந்திருந்தால்தான் அம்மான் என்று கொண்டாட முடியும். இவ்வளவு அருமையாயும் சொந்தமாயும் உள்ளவர்களுக்குப் பிறக்கும் பெண் இன்னும் அதிக சொந்தமுள்ளவளன்றோ? அந்த அதிகத்துக்குத் தக்கபடி அங்கே அன்பின் ஊற்றும் இயற்கையாகவே பெருகி நிற்குமன்றோ? களங்கமற்ற உண்மையன்பை இங்கு காணலாமன்றோ? அத்தை மகளும், அம்மான் மகளும் ஒருவனுக்கு மனைவியாக வரினும் வராவிடினும், எப்போதுமுள்ள சொந்தமும் அன்பும் எப்போதுமே இருந்து கொண்டிருக்கும். இன்னும் அவர்கள் தனது சிறுபருவ விளையாடலில் துணையாக நின்றவர்களாகவும் இருக்கலாம். ஆயிரம் விதங்களில் அவர்களின் ஞாபகம் மனத்தின்கண் என்றைக்கும் இருந்து கொண்டே இருக்கும். ஆனதால்தான் அன்பின் பெருக்கைக் குறிப்பிடுவதற்கு இவ்விருவரையும் ஒரு எடுத்துக்காட்டாக உபயோகித்து இப்பழமொழியில் சொல்லப்பட்டிருக்கிறது. அத்தை மகளும், அம்மான் மகளும் என்றென்றும் மங்களமாய் வாழ்க.

**95. ஆகிறவன் அரைக்காசிலும் ஆவான், ஆகாதவனுக்கு ஆயிரம் கொடுத்தாலும் விடியாது.**

"ஆகிறவன்" என்பதற்கு அன்புள்ளவன் என்பது பொருள். அன்புள்ளவனுக்கு விருந்து என்பது தேவையில்லை. அவனுக்காக வென்று நாம் பாடுபட்டு விருந்திடுவது அவனுக்குக் கஷ்டத்தையே தரும். நமது உள்ளன்பைத் தெரிந்துகொள்ளாமல் இந்த உபசாரங்களால்தான் நமக்கு அன்பு உண்டாகவேண்டுமென்று எண்ணுகிறார்

களே ; பழைய சோற்றைப் போட்டாலும் பிரியமாய் சாப்பிடு வேனே ; எனக்காக ஏன் இவ்வளவு பிரயாசை எடுத்துக்கொள்ள வேண்டும் ; எனக்கு வேண்டியது அன்பே தவிர இவைகளெல்லாம் அல்லவே என்பான். இவ்வித அன்புடையோன் என்றைக்கும் "ஆகிறவ"னே; இவன் அரைக்காசிலும் ஆவான். இனி "ஆகாதவனோ" அதாவது நெஞ்சில் அன்பின் பசை இல்லாதவனோ ஸதா குற்றமே கூறுவான். எவ்வளவு செய்தாலும், 'ஆயிரம் கொடுத்தாலும்' அவனுக்கு விசுவாசமே இருக்கப்போகிறதில்லை. இவ்வளவுக்குச் செய்தார்களே என்று அவன் எண்ணப்போகிறதே யில்லை. எவ்வளவு கொடுத்தும் கடைசியில் விரோதப் பேச்சுதான். பிரிந்து விலகி விடும் தன்மைதான். துரோக நினைவுதான். கெடுபுத்தி தான். அவர்களின் வீட்டில் என் ஆயுசுக்கும் ஜலபானம்கூடப்பண்ணியிருக்க மாட்டேனே என்கிற வார்த்தைகள் தான். எவ்வளவு பொறுமை யுள்ளவர்களும்கூடக் கேட்டுச் சகிக்க முடியாத அவ்வளவு பொல் லாதவர்களாகவும் மாறிவிடுவர். இப்படி அன்பின் பசை முற்றும் வற்றிப் போவதையே இப்பழமொழி விளக்குகிறது.

96. நன்றாயிருந்தாலும் பார்க்கமாட்டார்கள், கெட்டாலும் தாங்க மாட்டார்கள்.

யார் இப்படி? அன்பற்றவர்கள்தான். அன்பின் ருசிகரம் தெரியாதவர்கட்கு உலகத்தில் எந்த நல்லதையுமே பார்க்க மனம் சகிக்காது. அன்பு என்னும் கிளியைப் பொறாமை யென்னும் பூனை ஒரு நிமிஷத்தில் கொன்று தின்றுவிடும். அன்பற்றோருக்குத்தான் பொறாமைப் பேய் பிடிக்கும். அன்பில்லாதவர்களை நாம் எவ்வள வுக்கு ஆதரித்தாலும், கடைசியில் அவர்கள் தங்கள் வீட்டுக்குப் போகிற தினத்திற்கு முந்தியநாள் எவ்வாறேனும் ஒரு சண்டையை உண்டாக்கிக் கொண்டு பிரிந்துபோய்விடுவார்கள். இன்னும் நம்மைக் கண்டபடி சபித்துவிட்டும் போவார்கள். நாம் வெகு ஜாக்கிரதையாய் அவர்களுடன் சமாதானத்தோடு இருந்து அன்பாய் உபசரித்து வருகையில் சண்டை மனஸ்தாபங்கள் எப்படி உண்டாகு மென்று கேட்கலாம்? அதற்குத்தானா வழியில்லை? ஆயிரம் பாதை கள் உண்டு. பழய கதையை மெல்லத் தொடங்கி, அந்தக் காலத் தில் அவர்கள் அப்படிச் செய்தார்கள், இப்படிச் செய்தார்கள் என்று ஆரம்பித்து, நீயும் கூடத்தான் அவர்களோடு சேர்ந்திருந்தாய் என்று சொல்லித் திரியேற்றி எண்ணெய் ஊற்றிவிட்டால் உடனே கலக நெருப்பு மூண்டுகொள்ளும். பதிலுக்குப் பதில் மறுப்புகளும் திட்டுகளும் ஆரம்பித்துக் கூச்சல் பெருகி சரியான முற்றிய சண்டை யாக மாறிவிடும். இன்னும் நமது வீட்டில்தானே புசித்துக் கொண்டே இவனும் இவ்வளவு வாழ்வு வாழ்கிறானா என்று எண்ண

வைக்கும். இனி கெட்டுப்போனாலோ, அவன் ஆணுவத்திற்கு அப்படித்தான் வேண்டும், அப்போதே இந்த வாழ்வு மூன்றரை நாழிகைக்குத்தான் என்றேனே, பலித்தது பார்த்தாயா? நன்று யிருந்த காலத்தில்தான் அவர்கள் என்ன செய்தார்கள்?—என்ன வாரிக்கொடுத்துவிட்டார்நள் என்று வசைபுராணம் பாடத் தொடங்கிக்கொள்வார்கள். எந்த வகையில் தங்களை நெருங்காதிருக்க முடியுமோ அதற்குத் தகுந்த விதமாகத் தங்களின் வசைப்பேச்சுகளை வளர்த்துத் தங்கள் வீட்டு வாசல் மிதிக்காதபடி செய்துவிடுவார்கள். இவ்வளவும் பொறுமைப்பேய் செய்யும் கூத்துதான். பொறுமையானது எத்தகைய அன்பையும் கெடுத்துத் தன்னலம் கருதச்செய்துவிடும். எந்த நாளைக்குமே கெடுபுத்தி தான், ஆத்திர சிந்தைதான். விசேஷமாய் மாற்றாந்தாய், சிற்றப்பன் போன்ற நெருங்கிய வகையில் இத்திருவிளையாடற் புராணத்தைக் காணலாம். எல்லா சச்சரவுகளும், சண்டைகளும், பொறுமைகளும் நெருங்கிய வகைக்குள்ளிருந்து தான் உற்பத்தி! அன்பு மாறிக் கெட்டுப்போகுங் காலையில் அலங்கோலமாய் இவ்வளவும் நேர்ந்துகொள்கிறது.

(தொடரும்.)

## மனமும் புத்தியும்.

மனம் இன்றைக்கு க்ஷவரம் செய்துகொள்ள வேண்டுமென்று சொல்லுகிறது. அதற்காக உடனே எழுந்திருக்கும்படி தூண்டுகிறது. அவ்விதமே எழுந்திருக்க முயலுகிறான். தக்ஷணமே 'புத்தி' அவன் முன்பு எதிர்பட்டு அடே! இன்று சேவ்வாய்க்கிழமை; சேவ்வாயில் எதுவும் கூடாது; சேவ்வாயன்று செய்துகொண்ட க்ஷவரத்திற்கு இன்னொரு தரம் க்ஷவரம் செய்துகொண்டு நிவர்த்தியாகும் வரையில் அதன் இடையேயுள்ள நாட்களில் தொடங்கும் எந்த வேலையும் விடியாது; ஆனதால் வேண்டாம் என்கிறது. இந்தப் போதனை அவனுக்குச் சரியென்று படுவதால், துள்ளிக்குதித்த தன் மனத்தை யடக்கிவிட்டு, 'புத்தி' யின் உபதேசப்படி நடந்து கொள்ள ஆரம்பிக்கிறான். இவ்விதமே ஒவ்வொன்றிலும் கண்மூடித்தனமாய் மனம் ஏவ, புத்தியோ அதற்குத் தக்கபடி அதைத் தடுக்க முன்வந்து உடனே திருத்துகிறது.

ஆகாயத்தில் பறக்கும்பட்சி தண்ணீரின் ஆழத்திற்கேன் அஞ்சவேண்டும்?

# பெரியாரின் மொழிகள்

(2-ம் கமலம் 628-ம் பக்கத் தொடர்ச்சி.)

223. If Nature put not forth her power about the opening of a flower, who is it that could live an hour ? TENNYSON.

இயற்கை என்பது ஒரு புஷ்பம் மலருவதற்குத் தன் சக்தியைக் கொடுக்காவிட்டால் யார்தான் ஒரு நிமிஷமாவது உயிரோடிருக்க முடியும்?

டென்னிஸன்.

224. Rest awhile, nor longer waste life with inconsiderate haste ! LONGFELLOW.

சற்று இளைப்பாறு. யோசனை இல்லாமல் பரபரப்புடன் வாழ்நாளை அதிகமாக வீணாக்காதே. லாங் பெல்லோ.

225. The rose looks fair, but fairer we it deem nor that sweet odour which doth in it live. SHAKESPEARE.

ரோஜா அழகாயிருக்கிறது. ஆனால் அதிலிருக்கும்படியான வாசனைக்காக அது இன்னும் அதிக அழகாய் இருப்பதாக மதிக்கிறோம். ஷேக்ஸ்பியர்.

226. The quick footsteps of the falling now, like the footsteps of angels scending upon earth. LONGFELLOW.

பனி வேகமாக விழுதலானது பூலோகத்தில் இறங்கும் தேவதைகளின் பாத அடிகளைப் போலிருக்கிறது. லாங்பெல்லோ.

227. Life, to be worthy of a rational being, must be always in progression. JHONSON.

ஒரு பகுத்தறியும் ஜந்துவுக்கு ஜீவன் தகுதியுள்ளதாக இருக்கவேண்டுமானல் அது வரவர முன்னேற்றத்தை யடையவேண்டும். ஜான்ஸன்.

228. Small curs are nct regarded when they grin, But great men tremble when the lion toars. SHAKESPEARE.

சிறிய நாய்கள் பல்லைக் காட்டும்பொழுதுகூட மதிக்கப்படுகிறதில்லை. ஆனல் சிங்கம் கர்ஜிக்கும்போது பலிஷ்டர்கள்கூட நடுங்குகிறார்கள்.

ஷேக்ஸ்பியர்.

229. The roses make the world so sweet, The bees, the birds have such a tune, There's such a light and such a heat, And such a joy this June GEORGE MACDONALD.

ரோஜா புஷ்பங்கள் உலகத்தை மிகவும் இன்பமாக்குகிறது. அதே மாதிரி தேனீக்களும் சங்கீதத்தினால் இனிமையாக்குகிறது. இந்த ஜூன் மாசம் அவ்வளவு வெளிச்சமும், அவ்வளவு உஷ்ணமும், அவ்வளவு சந்தோஷமுமாக இருக்கிறது. ஜார்ஜ மாக்டனல்ட்.

230. It is better to fight for the good than to rail at the ill. TENNYSON.

கெட்டதைக் கண்டு ஏளனம் செய்வதைவிட நல்லதுக்கு சண்டையிடுவது மிகவும் நல்லது. டென்னிஸன்.

231. O great eternity! Our little life is but a gust, That bends the branches of thy tree, And trails its blossoms in the dust.
LONGFELLOW.

ஏ சாசுவதமா யிருக்கும் காலமே! எங்களுடைய அல்ப ஆயு ளானது மாமாயிருக்கும்படியான உன்னுடைய கிளைகளை வளைத்து புஷ்பங் களைப் புழுதியில் வீழ்த்தும் ஒரு சிறிய காற்று. லாங்பெல்லோ.

232. God has lent us the earth for our life; it is a great entail.
RUSKIN.

கடவுள் நாம் வசிப்பதற்காக பூலோகத்தை இரவலாக அளித்திருக் கிறார். அது தொன்றுதொட்டுப் பரம்பரையாயுள்ளது. ரஸ்கின்.

233. Knowledge is infinite, and the man most learned in human estimation is just as far from knowing anything as he ought to know it, as the unlettered peasant.
RUSKIN.

அறிவு என்பது எல்லையில்லாதது. மனிதர்கள் முன்பாக எவனொருவன் ரொம்ப படித்தவனாகக் காணப்படுகிறானோ அவன், எழுத்து வாசனையே யில்லாத குடியானவன் ஒருவன் ஒரு விஷயத்தைப்பற்றி எவ்வ ளவு தெரிந்துகொண்டிருக்கிறானோ அவ்வளவே தெரிந்து கொண்டவ னாகிறான். ரஸ்கின்.

234. Oh yet we trust...That nothing walks with aimless feet, That not one life shall be destroy'd Or cast as rubbish to the void, When god hath made the pile complete.
TENNYSON.

நாம் இன்னும் நம்புவது என்னவென்றால் :—பூலோகத்தில் எதுவும் கண்மூடித்தனமாய் நடக்கவில்லை. ஒரு வஸ்துவாவது பிரயோஜன மற்றதாயில்லை. நாம் கடவுள் எல்லாவற்றையும் ஒருங்கே சேர்த்து சிருஷ்டித் திருக்கும்படியான உலகத்தில் எந்த ஜீவனையும் நாசமாக்கவும் கூடாது. பிரயோசனமற்றதென்று குப்பையோடு குப்பையாய்த் தள்ளவும் கூடாது.
டென்னிஸன்.

235. Alas, how light a cause may move Dissensions between hearts that love?
MOORE.

அந்தோ! எவ்வளவு அல்ப காரணமானது நன்றாய் நேசிக்கும் இரு மனங்களை வேறுபடுத்த சக்தியுள்ளதா யிருக்கிறது? (மூர்.)

236. The world is happy, the world is wide, Kind hearts are beating on every side.
J. R. LOWELL.

உலகம் சந்தோஷமா யிருக்கிறது. விசாலமாயு மிருக்கிறது. அன்பு நிறைந்த இருதயங்கள் எல்லாப் பக்கத்திலும் அடித்துக்கொண்டிருக் கின்றன. ஜே. ஆர். லவல்.

P. E. பாஷியம் நாயுடு.




# கல்வியின் இன்சுவை.



ஆ! கல்விகற்ற கலாவதிகள் அருமையான நாவல்களை வாசிக்கும்போது வெகு ரம்மியமாகக் கதாசிரியர் எழுதும் நடையையும், கதையின் போக்கையும் வியந்து மனதிற்குள்ளாகவும் பிறரிடம் சொல்லியும் எவ்வளவோ சந்தோஷப்படுகிறார்கள்.

தினப்பத்திரிகையை வாசிப்பதினால் ஆங்காங்கு நடக்கும் செய்திகளையும், பத்திரிகையின் ஆசிரியர் பசுந்தாய்த் தலையங்கம் கொடுத்து எழுதும் அரிய விஷயங்களையும் உணர்ந்து ஆநந்திக்கலாம். இப்பொழுது உலகம் சுற்றிவரும் அமீர் அரசர் அரசி இவர்களைப் பற்றியும், அந்தந்த ஊர்களுக்குத் தக்க விதமாய் அரசி சௌரியா ராணி உடை உடுத்திக்கொள்ளும் விதமும், அமீர் அரசரும் அரசியும் லண்டனுக்குச் சென்றபோது நமது ஜார்ஜ் சக்ரவர்த்தியும் சக்ரவர்த்தினியும் ஆப்கன் அரச தம்பதிகளை எதிர்கொண்டழைத்த வைபவத்தையும், அமீர் அரசருக்கு நமது அரசர் சலாம் செய்துவிட்டு அரசி சௌரியா ராணியின் கையை முத்த மிட்டதும், அரசியும் அரசியும் கைகுலுக்கிக்கொண்டதும், இவர்களுக்கென்று மேரி ராணியார் அவர்களே அலங்கரித்த மாளிகையில் இவர்கள் தங்கி விருந்துண்டதும், இவையெல்லாம் வாசிக்கின்றபோது அரசர்களின் கௌரவங்களும், அவர்கள் (அரசர்கள்) அந்தந்த தேசமுறைப்படி மரியாதை செய்யும் விதமும் தெரிந்துகொண்டு அவர்களின் வாழ்க்கையை அப்படியே கொஞ்சம் மனதில் நினைக்கவும் செய்கின்றது.

மற்றோர்புறம் ஹிந்தூர் மகாராஜா வெகு ஆடம்பரத்துடன் மணந்துகொண்ட மிஸ் மில்லர் என்ற சர்மிஷ்டா தேவியை இந்து மதத்தில் சேர்த்துக்கொண்ட நாளில் அங்கு நடந்த சடங்குகளும் அன்று அம்மாது நீலவர்ண சரிகைச்சேலை உடுத்திக்கொண்டு, நெற்றியில் குங்கும திலகமிட்டு, காலில் பாதரக்ஷையும் அணிந்துகொள்ளாமல் வெகு பொலிவுடன் மெல்லென நடந்துவந்து குருவை நமஸ்கரித்

துக் கொண்ட பணிவும் இவற்றையெல்லாம் வெகு நேர்த்தியாக வாசித்துச் சுவைக்கின்றோம். அந்த மதம் மாற்றும் சடங்குகளையும் மற்ற வைபவத்தையும் எல்லாம் படித்தபோது நேரில் கண்டதைப் போல அவ்வளவு சந்தோஷமா யிருந்தது.

இராணி சர்மிஷ்டாதேவி மிஸ் மில்லரா யிருந்தபோது தலையில் தொப்பி அணிந்து நீண்ட சட்டையுடன் (கவுண்) கக்கத்தில் ஓர் புஸ்தகத்தை இடுக்கிக்கொண்டு கையில் குடையுடன் வெகு மூடுக்காய் நின்று எடுத்த படமும், ஹிந்துமதத்தில் சேர்ந்த அன்று தலையில் முக்காடிட்டு மராட்டிய உடையில் பொலிவுற்று ஹிந்து மாதைப் போல வெகு பணிவாகக் கைகளை கோர்த்துக்கொண்டு நின்ற படமும் காணும்போது இம்மாதுதானு மிஸ் மில்லர் என்ற அமெரிக்கா நங்கை யென்று சந்தேகிக்கவும் நேர்கிறது !

இவ்விஷயங்களை எல்லாம் கல்வியில்லாக் காரிகைமார் அறிவார்களோ ? கல்வியின் அருமையும், அதில் நிறைந்துள்ள ஆநந்தத்தையும் கல்வியற்ற சுந்தரிகளிடம் சொன்னல் அது அவர்களுக்கு வெகு அலக்ஷியமாய்ப்படுகிறது. அவற்றிலுள்ள இன்பரஸத்தையும் அவர்கள் உணரமுடியவில்லை. உணர்வதற்கு அறிவுமில்லை.

உலகத்திலே இன்னதுதான் நடக்கிறதென்று ஒன்றும் தெரியாமல் நமது ஸகோதரிகள் வீண் பேச்சுகளைப் பேசிக் காலங்கழிக்கின்றார்களே! நாம் பத்திரிகைகளில் வாசித்ததை இவர்களும் தெரிந்துகொள்ளட்டுமென்று சொல்லப்புகினே எனக்குமுன் 'மெயில்' பேப்பர் வாசித்து விஷயம் தெரிந்துகொண்டவர்களைப் போல சர்வ சாதாரணமாகக் கேட்கின்றார்களே தவிர, அப்படியா, எந்த ஊரில் நடந்தது, இந்து மதத்தில் எப்படி சேர்க்கப்பட்டாள், அன்று என்னவிதமான சடங்குகள் நடந்தது? என்று இப்படியாக ஒரு உணர்ச்சி மேலிட்டு விசாரிப்பதே யில்லை. அதில் அவர்களுக்கு ஒரு புது ஆவலும் உதிப்பதே யில்லை. மனுஷ்ய ஜென்மமெடுத்தும், அந்த அரிய பிறவியில் மிக்க ஆநந்தமாய் அநுபவிக்கக்கூடிய வித்தியா இன்பரஸத்தை உணர்ந்து ருசிப்பதற்கு அதிர்ஷ்டமற்றுப் போவது எத்துணைத் துர்ப்பாக்கியம்? என்னருமைச் சகோதரிகளே, நீங்கள் வாசிக்காவிட்டாலும், வாசித்தவர்களிடமாவது நல்ல புஸ்தகங்களை வாசிக்கச் சொல்லி அதையாவது கேட்டு சந்தோஷப்படக் கூடாதா? விருதா கோஷ்டியில் காலத்தைப் போக்குவானேன் ?

சகோதரி மனோரஞ்சினி தேவி.

---




# ராணி, ஸ்ரீமதி சர்மிஷ்டா தேவியின் காதல்.

உலகெலாம் போற்றும் உயர்நிதிக் கிழவர்
அலகிலா துறையும் அற்புத நாடாம்
† கீழ் நாடென்று கிளத்துவார் எதிலும்
மேல் நாடாக விளங்கமரிக்காத்

தேசச் சீமான் செல்வக்குடியில்
ஆசில் கற்புடையேன் அவதரித்திட்டேன்
வாதத் துயர்ந்த வஞ்சமில் கிறிஸ்து
* வேதக் கோடியாய் விளங்கலில் ஆன்ற

அறநூல் பற்பல ஆய்ந்தேன் வேறு
பிறநூல் கற்கவும் பேரவாக் கொண்டேன்
நந்தூர் கழனி நாமவேலி சூழ்
இந்தூர் வேந்தரென் இதயங் கவர்ந்தார்

அழகி லறிவில் அருமந்த உரையில்
‡ குழகன் அவர்மேற கொண்டேன் காதல்!
ஆயினு * முன்னோர் ஆயிழை தன்னை
¶ வாயினல் மணந்த வஞ்சனையாலே

மத்தியிற் பிரிய வாய்த்ததால் அந்தோ!
அத்திர மேனக்கங் காகாதிருக்க

---

† கீழ்நாடென்று=பாதாள உலகமென்று.

* வேதக்கோடியாய்=வேதத்தைத் தழுவிய பெண்ணாய்.

‡ குழகன்=அழகுடையவன், * முன்னோர் ஆயிழை=மும்தாஜ்பீகம் என்ற இஸ்லாமியப் பெண்ணை.

¶ வாயினல் மணந்த=பல பேர் அறியச் செய்கையில் கல்யாணச் சடங்குகள் செய்துகொள்ளாமல், தலைவனும் தலைவியும் வாய்ப்பேச்சளவில் பிறகு மணம் (?) செய்துகொள்வதாய்ச் சொல்லி ஏமாற்றி மருவும் போலி மணம்.

தலைவர் தலைவி தனிக்காந்தருவம்
கலையும் அதுவுங் கண்ணளவாகும்

" மன்னு ! வுமது மதத்தளாய் மாற்றி
மின்னுர் மதிக்க வேந்தர்கள் துதிக்கத்
தீமுகத் தென்றன் றிருக்கரம் பிடிக்க
ஆமெனி லுமக்கியா னமைவே னென்றேன்; "

தீரத் தெளிய சிந்தனை புரிந்து
ஆர அமர அரசர் சம்மதித்தார்
சற்குருவாகிய சங்கரா சாரியர்
அற்புத மென்ன அங்கீகரித்தார்

நாற்புறம் வேத நாத கீதத்தின்
ஆர்ப்பெழ விண்ணோர் அலர் மழை பொழிய
வஞ்சியர் என்னை மஞ்சன மாட்டி
கொஞ்சுங் களப குங்கும மணக்க

உயர்ந்த பட்டாடை யுடுத்தி நவமணி
நயந்த கடகமும் நன்முத்தாரமும்
பூட்டினர் குங்குமப் பொட்டு மிட்டார்கள்
மூட்டிய வேள்வி † முத்தீ முகத்தில்

" இந்திய மாதர் இயல்பினி லிருத்தி "
சிந்தனைப் பிராயச் சித்தஞ்செய்து
* தாவிய கதைக்குத் தக்க " சர்மிஷ்டா
தேவி "யென் றெனக்குத் திருப்பெய ரிட்டார்.

---

† முத்தீ=(1) வேதத் தீ, அதாவது ஆகவநீயம், (2) காருகபத்யம், (3) தக்ஷணாக்கினி.

* தாவிய கதைக்கு=அசுரகுலாதிபனுகிய விடபர்வனுடைய புத்திரியின் பெயர் " சர்மிஷ்டை " யாகும். இவள் அசுரகுலம். இப்பெண்மணியை வேறொரு குலத்தினனான சந்திரகுல வேந்தன் " யயாதி " திருமணம் புரிந்தனன். சர்மிஷ்டை அன்னிய குலத்தைச் சேர்ந்தவரைக் காதலித்துப் பூர்வம் மணக்க நேர்ந்த கதைக்குப் பொருத்தமாய், இப்போது அன்னிய குலத்தினரை மணக்கும் " மிஸ் மில்லர் " என்ற இந்த அமெரிக்கப் பெண்மணிக்கும் " சர்மிஷ்டை " என்று நாமகரணம் செய்தனர் போலும்.

வேதியர் வாழ்த்த விஞ்சையர் பாட
மாதர்கள் ஆர்த்தி வரிசை யெடுக்க
அம்மி மிதித்தும் அருந்ததி பார்த்தும்
சம்மதத் தேவர் சான்று நிற்க

மஞ்சளிற் றோய்த்த மங்கல நாணைக்
கஞ்சமனைய கரத்தா லெடுத்துக்
கட்டினு ரேனது களத்தினின் மன்னர்
அட்டியில் மாமக ராணியு மானேன்

உத்தமக் காதல் ஒருவருக் குதித்தால்
எத்திரத் தாலும் எய்திடும் இன்பம்
இதற்கே கடவுள் இன்னருள் கூடும்
மதிப்பீ ரென்போல் மதியுடை யோரே.

## பேசாமையிலுள்ள பெரிய தீங்கு

நீ உன் மனைவியுடன் வருத்தமாய்ப் பேசாதிருப்பதானல், நீயே அவளுக்கு உன்னுடன் பேசாதிருக்கும்படியான தீய பழக்கத்தைக் கற்றுக்கொடுத்துவிடுபவனாகிறாய். பிறகு இதிலிருந்தும் நேரிடுவது என்ன தெரியுமா? உனக்குத் தேள் கடித்து நீ அலறினாலும் உன் மனைவி உன் அருகில் வராமல் ஜாடையாகப் போய்விடுவாள். ஏனெனில் நீயும் அவளும் பேசுவதில்லையல்லவா? பேசாமை பெரிய விஷமமான பழக்கமாகும்.

## தேகம்—திரேகம், செலவுசிலவு—.

'தேகம்' என்பது 'திரேகம்' முதலியனவாக விகாரப்பட்டு வருதல் நாவின் முதிர்ச்சியினது இயற்கையாயினும், ஆன்றோர் 'திரேகம்' என்ற சொல்லை ஒப்புக்கொள்ளார். இவ்விதமே 'சிலவு' என்பதைச் 'செலவு' என்று திருத்துக.

"எப்பொருளெச் சொலின் எவ்வா றுயர்ந்தோர்
செப்பின ரப்படி செப்புதல் மரபே" (நன்னூல்)

அதாவது—எந்தச் சொல்லைப் பெரியோர்கள் எப்படிச் சொல்லினரோ, அப்படியே தவறுதலின்றிச் சொல்லவேண்டும்.

விவேகம்
விநோதம்
விசித்திரம்
விகடம்




அநுபவம்
அற்புதம்
ஆச்சரியம்
ஆநந்தம்

# பூவோ பூ! மூன்று பூ!!



விகடன் "விபவப் புது வருஷத்திலே என் விகட குட்டிக் குழந்தைகளை எதிர்கொண்டு சந்திப்பதற்காக மூன்று பூக்களுடன் புறப்பட்டுக் கொண்டேன். முதலில் விபவ வருஷத்திய பலனை, அந்த வருஷத்தின் பெயரை ஒவ்வொரு எழுத்தாகப் பிரித்துச் சொல்லி விடுகிறேன். சுருக்கெழுத்து லக்ஷணப்படி "வி" என்பதற்கு "விகடன்" என்று பொருள். "ப" என்பதற்கு "பணம்" என்று அருத்தம். "வ" என்பதற்கு "வரும்" என்று கருத்து. அதாவது "விகடன் பணம் வரும்" என்பதாம். புது வருஷத்திற்கு விகடனுடைய சந்தாப் பணமெல்லாம் கைக்கு வந்து விடுமென்று புதுவருட பலனில் கண்டிருப்பதால் விகடன் இன்னும் சிலாக்கியமாகவே இவ்வருஷத்தில் விளங்குவான். இனி, மற்றொரு விகட வியாக்யானத்தின்படி "வி" என்பதற்கு "விசேஷமாக" என்றும், "ப" என்பதற்குப் "பருவமழை" என்றும், "வ" என்பதற்கு "வருஷிக்கும்" என்றும் பொருள்படுவதால், "விபவ" வருஷ பலன் மாதமும்மாரி பொழிந்து மங்களகரமாய் நிறைவேறுமென்றும் தெரிகிறது. ஆகவே, என் நஞ்சான் குஞ்சான்களுக்கெல்லாம் இனி நல்ல காலந்தானென்று நன்மையான நல்ல வசனமாய்ப் புது வருட சோபனம் கூறுகிறேன்.

* * *

"பூவிலே பிறந்து, பூவிலே வளர்ந்து, பூலோகம் ஆண்ட ராஜாவே! பூவிலும் சின்ன பூ என்ன பூ" என்று ஒரு கன்னிகைப் பெண் வினவியதாகவும், அதற்கு அந்த அரச குமாரன், "எள்ளிலே பிறந்து, எள்ளிலே வளர்ந்த எழில் வாணிய மகளே! எள்ளிலும் சின்ன இலை என்ன இலை" என்று பதில் கேள்வி கேட்டதாகவும் ஒரு கதை. விகடன் கொண்டுவந்த பூவோ அந்த எள்ளுப் பூவுமல்ல, அந்த எள்ளிலையுமல்ல. எல்லாம் அனுபவப் பூ! எல்லாம் மூணு மூணுக்கும் பூ! முதல் பூ—"மதித்த இடத்தில் மிதிப் பூ" என்பது. இரண்டாம் பூவோ—"மிதித்த இடத்தில் மதிப்பூ" என்பது. மூன்றாவது பூவோ—"மிதித்த இடத்தில் மிதிப்பூ" என்பது. முதல் பூவை முதலில்

பேச என்திருவாயைத் திறந்துகொள்கிறேன். விகடனின் வாயைப் பார்க்காதீர்கள்; அங்கு ஓட்டைப் பல்லும், ஆடும் நாக்குமே இருக்கும்! அங்கிருந்து வரும் சப்தத்தை மட்டும் உன்னிப்பாய்க் கேளுங்கள்!

***

"மதித்த இடத்தில் மிதிப் பூ" என்பதின் பொருள் வெகு சுலபம். விரிவான வியாக்கியானம் இதற்குத் தேவையில்லை. எந்த இடத்தை ஒருவன் விசேஷமாகவும், தனக்கு ஒரு ஆதாரவாகவும் எண்ணி மதிக்கிறானோ அந்த இடத்தில் தான் அவனை அலக்ஷியப்படுத்தி மிதிக்கும் கண்ராவிகள் தொடங்கிக் கொள்கின்றன. தன் உழைப்பை அறியக்கூடிய எஜமான் என்றும், தன் விஸ்வாச வேலைகளுக்கு இன்னும் அதிக சம்பளம் உயர்த்துவானென்றும் எதிர்பார்த்து மனஸ்பூர்வமாக மதித்த இடத்தில் தான் அதற்கு எதிரிடையான மிதிப்புகள் ஏற்படுகின்றன. அந்த நண்பர்கள், அந்த உறவினர்கள் தனது கௌரவத்தை உயர்த்திப் போற்றுவார்களென்று கருதி மதித்த இடத்தில் தான் அவர்கள் அவனை நாலுபேருக்கு முன்பு கேவலப்படுத்துவோராகிறார்கள். தனக்கு வேண்டியவர்களின் விருந்து என்று மதித்து இலையில் உட்காரப் போக, விருந்திடுவோனோ—"இவன் என்னடா சனியன் இந்த முதல் பந்தியில் வந்து குந்திக் கொண்டான்"—என்று வெறுப்பாய், அவனை உள்ளே கூப்பிடுவதாகச் சொல்லி இலையை விட்டு எழுப்பி விடுகிறான்! எழுந்தவன் உள்ளே போனாலோ, அவன் கையில் பலகாரங்களின் தட்டைக் கொடுத்து அதைக் கொண்டு போய்ப் பரிமாறும்படி சொல்லியோ, அல்லது, இப்படி இருங்கள், முதல் பந்தி புசித்து ஆகட்டும், இரண்டாவது தடவை இலை போடும்போது உட்காரலாம் என்று சொல்லியோ அவனை அங்கேயே நிறுத்தி விடுகிறார்கள்! தான் மதித்த இடத்தில் இப்படியா மிதிப்பு என்று கலங்குகிறான். மதிப்புடன் தங்கள் பெண்ணை நடத்துவார்கள் என்று குதித்துக் கொடுத்த இடத்தில் தான் பல பல மிதிப்புகள் கிடைக்கின்றன. இவ்விதமே இதற்கு நெடுக வியாக்கியானங்களை வளர்த்துக் கொண்டு போகலாம். இதுவரை விகடன் விளக்கியுதிலிருந்தும் "மதித்த இடத்தில் மிதிப்பூ" என்ற வாக்கியத்தின் பொருள் என் விகடக் குட்டிகளுக்குத் தெரிந்து போயிருக்கும். முதல் பூ இப்படி.

***

இனி, "மிதித்த இடத்தில் மதிப்பூ" என்ற பூவை விவரிக்கிறேன். தன்னைத் திடீரென்று வேலையினின்றும் விலக்கி அக்கிரமமாய் மிதித்த இடத்தைத் தான், ஒவ்வொருவனும் பெருமையாய் நினைத்து மதிக்கிறான்! ஆ! அது நல்ல இடமல்லவா, எவ்வித தவறும் நாம் செய்யாதிருந்துங்கூட நம்மை வேலையிலிருந்து நீக்கி விட்டார்களே, அந்த இடத்திலேயே நாம் நிலைத்திருந்தால் எவ்வளவு சுகமாயிருக்கும்—கௌரவமாய் இருக்கும் என்று வாயூறுகிறான். தான் எவ்வளவோ அவனைவிட மேன்பட்டவனாயிருந்துங் கூட, அவனுக்கு இருக்கிற அதிர்ஷ்டபாக்கியம் தனக்கு இல்லாத ஒரு காரணத்தால், அந்த அதிர்ஷ்டத்தின் உச்சியில் ஏறிய அவன் தன்னை எவ்வளவு தாழ்வாக நினைத்து மிதித்தாலும், அவனை யொரு மதிப்பாகவே இவன் எண்ணுவோனாகிறான். தன் குமாரத்தியைக் கணவன் வீட்டார் எவ்வளவு கொடுமையாய் நடத்தி

மிதித்தாலும், பின்னுக்கு எல்லா சொத்தும் தன் மகளுக்குத்தானே என்ற நினைப்பில் அந்த இடத்தை ஒரு கௌரவமாகவே மதிக்கிறான். பணக்கார உறவினர் ஏழைப் பந்துக்களை எவ்வளவு கேவலமாக விசேஷங்களுக்குக்கூட அழைக்காமல் மிதித்தாலும், அவர்கள் பணக்காரர்கள், நாமோ ஏழைகள், நம்மை யவர்கள் மதிப்பார்களாவென்று ஏங்கிவிட்டு, அந்தச் செல்வவான்களை ஒரு மதிப்பாகவே தங்கள் நெஞ்சில்வைத்துச் சிலாகிக்கிறார்கள். இப்படியே, பெரிய ஜனத்தலைவரென்று பட்டம் பெற்ற பெரிய தலைவர்கள் இவர்களென்ன அற்பர்கள் என்று செல்வாக்கு இல்லாத ஏழைத் தேசபக்தர்களைக் கேவலமாக எண்ணித் தங்கள் காலின் கீழ் மிதித்தாலும், அந்த எளிய பக்தர்கள் 'அவர்கள்' நம்மை லக்ஷியம் செய்வார்களா வென்று சொல்லிவிட்டு அந்த ஜனத் தலைவர்களிடம் ஒரு மதிப்பே காண்பிக்கிறார்கள். தன்னை எவ்வளவு கேவலப்படுத்துகிற—எதிர்க்கிற—அலக்ஷியம் செய்கிற—மிதிக்கிற, பத்தினியா யிருப்பினும், அவள் தன் மனைவியல்லவா என்கிற ஒரு நினைப்பிலே அவன் புருஷன் அவளை ஒரு மதிப்பாகவே நினைக்கிறான். இவ்விதமே "மிதித்த இடத்தில் மதிப்பூ" என்கிற 2-வது விகடப்பூவுக்கு வியாக்கியானம் வெகு விரிவாகச் செல்லுகின்றது!

* * *

"மிதித்த இடத்தில் மிதிப்பூ" என்கிற 3-வது பூவிலே வெகுசங்கதிகள் இருக்கின்றன. அதற்கு ஒன்று இரண்டு என்று எண்கள் போட்டு ஜோடித்துக் காட்டி விடுகிறேன். அப்போதுதான் ஒருவகை தொகை மொத்தம் தெரியும். (1) ஒரு தினசரிப் பத்திரிகையைத் தொடர்ந்து நெடுநாளாக வாசித்து வருபவர்களுக்குப் புதிய தினசரிகள் இரண்டு மூன்று கிடைத்த போதிலும், அப் புதிய தினசரிகளில் ஒரு விசேஷச் செய்தியை அவர்கள் கண்டபோதிலும், அந்த செய்தியை அந்தப் பத்திரிகைகளில் படிக்க மன மில்லாமல், தங்களுக்கு வழக்கமான பத்திரிகையை எடுத்து அதன் நடையிலே அந்த விசேஷித்த செய்தியை வாசிக்க விரும்பும் மனோபாவ முள்ளவர்களாகிறார்கள். எந்த நடையை அவர்கள் முதலில் மிதித்தார்களோ அந்த வாசக நடையையே மறுபடியும் தொடர்ந்து 'மிதித்து'க் கொண்டு நிற்க அவாவுகிறார்கள். இதற்கு மேற்சொல்லிய பத்திரிகை சங்கதியும் ஒரு உதாரணமாகும். எதில் பழக்கமும் அபிமானமும் ஊன்றி விடுகின்றதோ அவ்வழியிலேயே சிந்தையும் செல்லுகின்றது. (2) இவ்விதமே தான் எந்தப் பொடி சுருட்டுக் கடையை முதலில்மிதித்தானோ அந்த இடத்தையே மறுபடியும் மிதிக்கிறான். (3) எந்தக் காபி ஹோட்டல் வாயிற்படியை மிதித்து வழக்கமோ அதையே பின்னும் தொடர்ந்து மிதிக்கிறான். பலசரக்குக் கடை முதலியவைகளையும் இப்படியே மிதித்த இடத்தில் மிதிப்பாய் அங்கேயே பற்று வரவு கணக்குகளும் கொள்கிறான். (4) எந்த வைத்தியர் அதிகப் பழக்கமோ அந்த மிதித்த இடத்தையே மறுபடியும் மிதிக்கப் போகிறான். (5) பழைய நாவிதனும் புதிய வண்ணானும் தேடவேண்டுமென்ற பழமொழிபோல் முன்பு மிதித்த நாவிதனிடமே மறுபடியும் சென்று மிதித்துக் கொள்கிறான். (6) பழகிப் போன வண்ணானின் வீட்டை விட்டுவிட மனமின்றி அந்த மிதித்த இடத்தையே மறுபடியும்

மிதிக்கிறான். (7) சிலருக்கு ஜட்கா வண்டி பிடிப்பதில்லை. சிலருக்கு மாட்டுவண்டி பிடிப்பதில்லை. அவரவர்கள் தாங்கள் மிதித்துப் பழகிய வண்டிகளையே மீண்டும் மிதிக்கிறார்கள். (8) ஏற்கெனவே தங்கி மிதித்திருந்த ஒரு ஊரையோ, இடத்தையோ தாங்கள் செல்லும் வழியின் இடையே கண்டால் அந்த ஊரையோ இடத்தையோ மறுபடியும் மிதித்து வர ஆவல் அதிகமாகி, அவ்விடத்திய முக்கிய பழைய நினைவுகளெல்லாம் ஞாபகத்துக்கு வந்து விடுகின்றன. (9) புசித்து ருசி கண்டு மிதித்த பதார்த்த வகைகளிலேயே மறுபடியும் மிதிக்க, சுவைக்க மனம் எழுகின்றது. (10) சங்கீத ஞானத்திலே ரமித்து மிதித்து ருசித்தவன் அதிலேயே காலமுற்றும் மிதித்து இன்புறத் தொடங்கிவிடுகிறான். (11) வாங்கின மதுக் கடைக்கே மறுபடியும் போகிற மிதிப்பு. (12) தான் எந்தக் கோயிலின் வாயிலைப் பக்தியுடன் மிதித்தானோ அங்கேயே என்றைக்கும் மிதிப்பு. (13) தன் கிராமத்துச் சிற்றூரையே இனிதாய்க் கொண்டு பாராட்டும் மிதிப்பு. (14) தன் ஊரே இனிப்பாய் விடும் மிதிப்பு. எத்தனை தேசம் சுற்றினும் முன்பு மிதித்த தன் ஊரில் மறுபடியும் மிதிக்க நினைப்பு. (15) தன் முன் நண்பனை யாவரிலும் மேலோனாக இனிக்கை. (16) தன் முந்திய முதல் தாரமே ருசிக்கை. (17) தன் முதற் குழந்தை மீதே அதிக பற்றுதல். ஏனெனில், புத்திர ஆசையை முதன் முதல் மிதித்து ருசித்து அநுபவித்தது அக்குழந்தையிடமே யானதால் தான். (18) புதிதாக அறிமுகஸ்தர்களைத் தேடிக்கொள்ளாமல், முன்பு மிதித்து அறிமுகமானவர்களின் வாயிலையே மறுபடியும் மிதிக்கப்போதல் (19) தன் முன்னோர் மிதித்துத் தங்கிய மதத்திலேயே தானும் மிதித்துத் தங்க நாடுதல். (20) முன்பு பழகிய உறவினரே என்றும் இனித்தல். (21) முந்திய துர்க்குணத்தை மறவாமல் முன் மிதித்த சேற்றிலேயே மிதித்தல். (22) முன் மிதித்து உறவாடிய தாசி வைப்புகளின் மீதே மீண்டும் மிதிக்க நாட்டம். (23) முன்பு மிதித்துப் பிழைத்த ஊரையே மீண்டும் மிதிக்கப் போதல். (24) முன்புதான் மிதித்துத் தனக்குப் பிச்சை யிட்ட இடத்தையே மறுபடியும் மிதிக்க நாடுதல். (25) தன்னைத் தூக்கிக் கொண்டாடிய இடத்துக்கே குழந்தை ஆவலுடன் செல்லுவதும் மிதித்த இடத்தில் மிதிக்கும் தன்மை தான். (26) அவரவர்க்கென்று ஒரு நடை, ஒரு ஜோர் தோன்றிக் கொண்டதிலே, தனக்குப் பழக்கமான தன் நடையிலேயே தன் மிதிப்பு. (27) தன் செய்கைகள், பழக்கங்கள் அவற்றிலேயே மறுபடியும் மிதிப்பு. (28) ரயிலில் ஜன்னல் அருகிலேயே மிதித்து உட்கார்ந்த வழக்கத்தில் அங்கேயே மீண்டும் மிதித்து உட்காரப் போதல். (29) பொடி டப்பியில் பொடி யில்லையெனத் தெரிந்தும், தன்னை யறியாமலே தன் கை, பொடி டப்பியைத் திறந்து ஏமாறுவதும் மிதித்த இடத்தில் மிதிப்பே. (30) ஒருவர் கண் மூடிவிட்டால் அதிலிருந்து சனியன் தொடர்ந்து மிதித்த புண்ணிலேயே மிதிப்புகள் படுகையும் இந்த இனத்தில் சேர்ந்ததே. (31) நித்தம் சண்டையாயுள்ள வீடும் மிதித்த சண்டையை மறுபடியும் மிதிப்பதையே காட்டுகிறது. (32) பட்டகாலிலேயே படுவதும் மிதித்த இடத்தில் மிதிக்கிற சங்கதி தான். (33) செட்டு, பிசுனாரித்தனம், தரித்திர

புத்தி, தாராளத்தன்மை, இரக்கமான குணம் முதலிய வைகளிலெல்லாம் எவ்வெவற்றில் எதெது மிதிப்போ அங்கேயே மறுபடியும் மிதிப்பு. மிதித்த இடத்தில் மிதிப்பூ என்பதற்கு இன்னும் எவ்வளவோ சொல்லலாம். ஆயினும் இந்த மூன்றாவது பூவின் விவரத்துக்கு இதுவரை எடுத்துக் காட்டியதே போதுமானதால், விகடன் இந்த மூன்று பூக்களிலும் உத்தமமான மலர்களைத் தெரிந்தெடுத்து மாலையாகக் கோர்த்துக்கொண்டு, அதைத் தரித்துக்கொண்டு மகிமை பெறும்படி என் மனித வர்க்கத்தினரை வேண்டிக் கொள்கின்றேன், ராம்! ராம்! சுபம்! சு! சுவாஹா!!

பணத்துக்கல்ல அன்புக்கு வணங்கு. அன்புக்கு அஞ்சு. அன்புக்கு உட்படு. அன்புக்கு ஊழியம் செய். அன்புக்குப் பட்டினிகிட. அன்புக்கு சுமந்துபோ. அன்புக்குப் பிராணனைவிடு. அன்புக்குச் சேர்ந்து நில். அன்புக்காக நஷ்டப்படு. அன்புக்காக எதிலும் துணிந்து விடு. அன்புக்காக எவ்வளவு தூரம் வேண்டுமாயினும் போய் அலைந்து அதைப் பெற்று வா. தினமும் அன்பைப் பெருக்கு. அன்புக்காகவே நீ வாழ்ந்திரு.




# இந்தியாவில் ராஜாவும் ஜனங்களும்.

இந்தியா முழுமையும் சேர்த்து ஆளும் ராஜா இந்தியாவில் வசிக்காமல் சமுத்திரத்துக்கு 6000-மைலுக்கப்பால் இங்கிலாந்தில் வசிக்கிறார். இந்த ராஜாவுக்கு ஐந்தாம் ஜார்ஜ் என்று பெயர். இம்மாதிரிப் பேர்கொண்ட ராஜா இதற்கு முன் நான்கு பேர் இருந்தபடியால் இப்போதிருக்கும் ராஜாவுக்கு ஐந்தாவது ஜார்ஜ் என்று பெயர். அவர் தூர தேசத்தில் வசிப்பதால் அவருடைய காரியஸ்தர் ஒருவரை நியமித்து இந்தியாவின் ஆட்சியை நடத்தச் சொல்லிவருகிறார். இந்தக் காரியஸ்தருக்கு கவர்னர் ஜெனரல் என்றும், வைசிராய் என்றும் ஆங்கில பாஷை

யில் பெயர். ஜார்ஜ் மகாராஜா இந்தியா முழுமைக்கும் சக்ரவர்த்தி யானதால், மற்ற ராஜாக்கள் அவருக்குக் கீழ்ப்பட்ட அந்தஸ்தைக் கொண்டவர்கள்.

தென்னிந்தியாவில், மைசூர், திருவாங்கூர், கொச்சி, புதுக் கோட்டை யென்ற சமஸ்தானங்களில் ஹிந்து ராஜாக்கள் இருந்த போதிலும், இங்கிலாந்திலிருக்கும் இந்தியச் சக்ரவர்த்தியின் காரியஸ்தராகிய கவர்னர் ஜெனரலது உத்திரவின்படி ராஜ்ஜியத்தை நடத்திவரக் கடமைப் பட்டவர்கள். அப்படியே இந்தியாவிலுள்ள மற்ற ஹிந்து — மகமதிய ராஜாக்களும் கடமைப்பட்டவர்கள். ஹைதராபாத் என்ற பெரும் சமஸ்தானத்திற்கு ராஜாவாகிய நிஜாம் அரசரும், சிந்தியா, ஹோல்கார், காயக்வார்—என்கிற மகாராஷ்டிர ராஜாக்களும், காஷ்மீர் ராஜாவும், ஜயப்பூர், பௌநகர் முதலான ரஜபுத்திர ராஜாக்களும் அப்படியே ஜார்ஜ் மகாராஜாவின்பிரதிநிதியாகிய கவர்னர் ஜெனரலின் உத்தரவுப்படி நடக்கக் கடமைப் பட்டவர்கள். இந்த ராஜாக்களன்றி, பூர்வம் இருந்த ராஜாக்கள் அழிந்துபோய், ராஜாக்களேயில்லாமல் ஆங்கிலேய உத்தியோகஸ்தர்களால் ஆளப்பட்டு வரும் நாடுகளே இந்தியாவில் பெரும்பாகமானவைகள். பெங்காளம், அலகாபாத், பஞ்சாப், குஜராத், பூனா, தென்னிந்தியா—இந்த இடங்களில் ராஜாக்களே இல்லை. இங்கிலாந்திலிருந்து ஜார்ஜ் சக்ரவர்த்தியால் நியமிக்கப்படும் ஆங்கிலேய உத்தியோகஸ்தர்களே இவைகளை ஆண்டுவருகிறார்கள். இவர்களுக்குக் கவர்னர் என்றும், லெப்டினேன்ட்கவர்னர் என்றும் பேர்.

(தொடரும்.)

## மூன்றும் வருட வாழ்த்து.

கட்டளைக்கலித்துறை.

ஒன்றிரண் டாண்டு கடந்துமூ வாண்டி
லுலவு கின்றாய்
இன்றைய நேர்மை தனிலுஞ் சிறந்திட
விந் நிலத்தில்
என்று நிலைத்துப் பொதுஜன நன்மைக்
கிசைந்த விதம்
பொன்றுது வாழ்குக ஆநந்த மாங்குண
போதினியே.

K. V. சந்தான கிருஷ்ண நாயுடு,
“ஆரியகர்ன சபை”த் தலைவர்.

# பிரபஞ்ச தரிசனம்

பஹிஸ்காரம் அல்லது வர்ஜனம் என்பது மகா பெரிய ஆயுதம். அதன் சக்தியை இந்தியா உணரத்தொடங்கிய காலம் 1904-ம் வருஷமாகும். வங்காள மாகாணம்தான் முதன் முதலாக இந்த அறிவைப் பாரத தேசம் முழுமைக்கும் பரவச் செய்தது. பஹிஷ்காரத்தினால் தான் நாட்டின் கைத்தொழில்களை உயிர்ப்பிக்க முடியும் என்பது சகல தேசத்தினரும் தெரிந்து வைத்திருக்கும் சங்கதி. அதை இந்தியா செய்தால் மட்டும் குற்றம் என்று சொல்லப்படுவது நியாயமாகாது. முதலும் சக்தியுமுடையவர்கள் அன்னியர்களாயிருந்தால், தேசத்தில் சகல லாபமும் அவர்களையே சேருமாதலால், அவ்விதம் ஆகாதிருக்க முதல் சேகரித்துச் சக்தியை யடையுமாறு தேசத்து ஜனங்களைத் தூண்டிக் கற்பித்து அவர்களை முன்னேறச் செய்வதுதான் உண்மையும் நடுநிலையுமான ராஜபரிபாலனமாகும். துரைத்தனத்தார் ஜனங்களுக்குச் செய்யவேண்டிய இவ்வுதவியை ஜனத்தலைவர்கள் செய்துவருவதற்கு அத்தலைவர்களிடத்தில் ஆளுவோர் நன்றியுடையவர்களாய் இருக்கவேண்டும். அவ்விதம் இருக்கிறார்களா என்பது கேள்வி? ஏன் இல்லை என்பது மற்றொரு வினா?

***

நல்ல சாமான்கள் ஜெர்மனியிலும் அமெரிக்காவிலும் செய்யப்படுகின்றனவென்று பிரிட்டிஷார் தங்களுடைய தொழிலாளிகளை ஆதரியாது விடுவார்களோ? "ஓ! ஜப்பானியர்களே! நீங்கள் ஏன் வீணாகப் பாடுபடுகிறீர்கள்? வீட்டில் சுகமாகப் படுத்துத் தூங்குங்கள். உங்களுக்கு வேண்டிய சகல சாமான்களையும் நாங்கள் செய்துகொடுக்கிறோம். பணம் மட்டும் நீங்கள் கொடுத்துவிட்டு வாங்கிக் கொள்ளுங்கள், மற்றக் கவலையெல்லாம் உங்களுக்கு வேண்டியதில்லை" எனப் பிறநாட்டார் சொன்னால், ஜப்பானியர்கள் நகைப்பார்களன்றோ? பொறாமை யுதவாதென்றும், ஜாதித்துவேஷங் கூடாதென்றும் ஆக்ஷேபிக்கக் கூடும். இந்த ஆக்ஷேபம் நியாயமானதே. ஆனால், தேசத்தின் இயற்கை வளப்பத்தைக் கொண்டு, தேசத்தார்களே லாபம் அடைய முயன்று சிற்சில குறிகள் காட்டினால்—அது பொறாமையுமாகாது, ஜாதித்துவேஷமுமாகாது. தேச விருத்தியைக் கருதிச் செய்யப்படும் நியாயமான முயற்சிகளைப் பொறாமையெனக் கூறுவது பொருத்தமல்ல. ஜனங்கள் அன்னிய சாமான்களைப் பஹிஷ்காரம் செய்வது பொறாமையினாலன்று. அன்னிய சாமான்களை விலக்கி, அவைகளுக்குப் பதிலாக சுதேசச் சாமான்களை யுண்டு பண்ணிப் பழக்கத்துக்குக் கொண்டுவரவேண்டுமென்ற ஆவலினாலேயேயாகும். இந்த ஆவல் எவ்வளவோ மகோன்னதம் பொருந்தியது.

***

உபயோகமற்ற சுதேசச் சாமான்களை ஏன் அதிக விலை கொடுத்து வாங்கவேண்டுமென்பது மற்றவர்கள் நம்மவர்களைக் கேட்கும் கேள்வி. அந்த லாப நஷ்டம் நம்மைப்

பொறுத்ததென்றும், அது விஷயத்தில் மற்றவர்கள் பரிவு காட்டவேண்டாமென்றும் நம்மவர்கள் பதில் சொல்லி வருகிறார்கள். அராஜகத்தையும் கொலையையும் சட்டத்திற்கு உட்படுத்தித் தண்டிக்கலாம். ஆனால் பஹிஸ்காரம், வர்ஜனம் என்பதை அவ்விதம் ஒரு குற்றச் செயலாகக் கொண்டு தண்டிக்கமுடியாது. ஏனெனில் பஹிஸ்காரம், வர்ஜனம் என்பது விருத்தியடைகிற ஒரு தேசத்தாரின் நியாயமான விருப்பமும் லக்ஷ்யமுமாகும். ஆனால், கலகமும் அமைதியின்மையும் பஹிஸ்காரம் வர்ஜனம் இவற்றால் உண்டாகிறதென்று ஒரு தோஷம் கற்பிக்கலாம். எனினும் இந்தக் குற்றஞ்சாட்டுகை நிலைக்காது. பஹிஸ்காரத்தை யடக்க முயல்வதினாலேயே கலகமும் அமைதியின்மையும் உண்டாகின்றன வென்பதற்கு நாம் எத்தனையோ திருஷ்டாந்தங்கள் காட்டக்கூடும்.

***

இப்பொழுது இந்தியாவிற் செய்யப்பட்டுவரும் கிளர்ச்சிகளும், காங்கிரஸ் மகா சபையின் 42—வருஷங்களின் உழைப்பும், மகாத்மாவின் பிரசாரமும் எவ்வளவுக்குப் பலன் தந்திருக்கின்றன வென்பது கேள்வி. அதற்குச் சரித்திர பரம்பரையைச் சற்று ஆராய்ந்து பார்த்தால் சரியான விடை அகப்படும். 1848-ம் வருஷத்தில் ஐரோப்பாவில் அநேக தேசங்களில் பெரிய கிளர்ச்சிகள் நிகழ்ந்தன. குழப்பங்கள் பெருகின. ஆஸ்திரியாவின் கையிலிருந்துதப்பி விடுதலை பெற இட்டாலி எத்தனித்தது. சுயேச்சை யடைய ஹங்கேரி தேசமும் முயன்றது. இன்னும் இதுபோன்ற பல மாறுதல்கள் நேர்ந்தன.

***

இந்த முயற்சிகள் நிறைவேறவில்லை யென்று சரித்திராசிரியர்கள் எழுதினார்கள். எப்படி யெனில், இட்டாலி மறுபடியும் ஆஸ்திரியரின் கையில் சிக்கிக்கொண்டது. ருஷியரும் ஆஸ்திரியரும் ஹங்கேரியைக் கசக்கிப் பிழிந்துவிட்டார்கள். இவ்விதமே ஜெர்மனியிலும் பிரான்சிலும் ஜனங்களின் பிரயத்தனங்கள் தோல்வியடைந்தன. ஆயினும் 1848-ம் வருஷத்தில் பிரஜைகள் செய்த முயற்சிகள் வியர்த்தமாகவில்லை. 25-வருஷங்களுக்குப் பிறகு எல்லாம் நிறைவேறி விட்டன. 1870-ம் வருஷத்தில் பிரான்ஸில் சாஸ்வதமான ஜனப் பிரதிநிதி சபை ஸ்தாபிக்கப்பட்டது. 1860-ம் வருஷத்தில் இட்டாலி தேசத்துக்கு அது கோரிய சுவாதீனம் கிடைத்தது. ஜர்மனி ஐக்கியமுற்றது. ஹங்கேரி தேசத்துக்கும் அது விரும்பின சுதந்திரங்கள் கிடைத்துவிட்டன!

***

தொடர்ந்து செய்யப்படும் கிளர்ச்சியுடன் சம்பந்தித்த சரித்திரம் எப்படி யிருக்குமெனில், பிரதம பிரயத்தினங்கள் காரியசித்தியைத் தரா. ஆனால், கடைசியில் இம்முயற்சிகள் பயன்னிக்காமற் போகா. இங்கிலாந்தில் க்ராம்வெலும் அவரைச் சேர்ந்தவர்களும் 1649—1660-ம் வருஷங்களில் செய்த முயற்சிக்குப் பலன் 1688-ம் வருஷத்தில் உண்டாயிற்று. பிரான்ஸிலே மிராபோ நெப்போலியன் இளையோன் என்பவர்கள் செய்த முயற்சிக்குப் பலன் 1870-ம் வருஷத்தில் உண்டாயிற்று. ஐரோப்பாவில் அறுபது வருஷங்கள் கழிந்தபிறகு நிகழ்ந்த விதமாகவே, இந்தியாவிலும் இப்போது செய்யப்பட்டுவரும் கிளர்ச்சிகளுக்குரிய பலனை இனி வருங்காலத்தில் நிச்சய

மாய் எதிர்பார்த்திருக்கலாம். அதை இனி வரும் சந்ததியார்கள் பெற்றுக் கொண்டாடட்டும். விக்டோரியா மகாராணியாருக்கு முன்பு ஆண்ட ஈஸ்ட் இந்தியா கம்பெனியின் பரிபாலனத்தில் இந்தியா எவ்விதமாக இருந்ததோ, இப்போது எப்படி யிருக்கிறதோ — இவ்விரு நிலைமைகளுக்கு முன்ன வித்தியாசம் யாவருக்கும் தெளிவாய்த் தெரிகிறது. நன்றாய் ஆலோசித்துப் பார்த்து அவசரப்படாமல் நடத்தும் முயற்சிகளின் வாயிலாகப் பிற்காலத்தில் மேன்மேலும் விசேஷ நன்மைகள் உண்டாகுமென்பது சரித்திர ஆராய்ச்சியால் தெளிந்த பெரிய அநுபவ உண்மை.



# சென்று போன நாட்கள்

## ஸ்ரீமான் குருமலை சுந்தரம்பிள்ளை
## ஸ்ரீமான் ஏ. சங்கரலிங்கம் பிள்ளை பி. ஏ.



இவ்விருவரையும் ஒன்று சேர்த்துக் குறிப்பிட்ட காரணத்தைக் கடைசியில் சொன்னால் தான் ருசிக்கும். ஸ்ரீமான் குருமலை சுந்தரம் பிள்ளை 1904-ம் வருஷத்தில் திருநெல்வேலியில் மிக்க பிரபலமாய் நடைபெற்றுவந்த "சர்வ ஜன மித்திரன்" பத்திரிகைக்கு உதவி ஆசிரியராய் இருந்து வந்தார். "சர்வஜன மித்திரன்" ஒரு உயர்தரமான தமிழ்ப் பத்திரிகை. வாரம் இரு முறை நடைபெற்று வந்து, பின் வாரப் பத்திரிகையாகவும் வெளிவந்து நின்றுவிட்டது. அப்பத்திரிகையில் ஸ்ரீ சுந்தரம் பிள்ளை "பணம்பற்றி மணமா? அல்லது குணம்பற்றி மணமா?" என்று ஒரு வியாசம் தொடர்ச்சியாக எழுத ஆரம்பித்தார். அது பின் ஒரு நாவலாக அமைந்து விடவே, அதனை முற்றிலும் பத்திரிகையில் வெளியிட்டுப் பூர்த்தி செய்தார். அதற்குப் "பொற்றேடி" என்று பெயரிடலாயிற்று. அது புஸ்தக ரூபமாகவும் இப்பொழுது விற்கப்படுகின்றது.

* * *

அதன் பின்னர் சென்னைக்கு வந்து "சுதேசமித்திரன்" உதவி ஆசிரியராக அமர்ந்தார். இலக்கண நூல் ஒன்றும் எழுதி வெளியிட்டார். "சுதேச மித்திர"னில் தமது பெயராலும் பல வியாசங்களை எழுதி வந்தார். அவரது தமிழ் நடை மிக்க அழகு வாய்ந்தது. எளிய நடையில் பெரிய கருத்துகளையமைத்துத் தெளிவாய் விளங்கும்படி எழுதும் ஆற்றலுடையவர். அவரது நடைக்கே ஒரு தனி அழகு உண்டு. லோக ஸ்வபாவத்தை நன்கு அறிந்து வைத்தவர். எவருடனும் பிரியமாய்ப் பேசுபவர். வெகு சுலபத்தில் நண்பராகக் கூடியவர். கர்வ சிந்தையற்றவர். கம்பீரமான பெரிய உருவம் படைத்தவர். நன்றாக உயர்ந்து வளர்ந்தவர். ஆரவார மில்லாதவர். அவர் காலத்தில் தான் சுதேச மித்

திரன் வெள்ளி ஜூபிலியும் நடை பெற்றது. அந்த வைபவத்தைநடத்து வதற்குத் தலைமையாய் நின்றவர் ஸ்ரீமான் பிள்ளை யவர்கள் தான். அந்த சந்தர்ப்பத்துக்குப் பொருத்த மாய் ஸ்ரீமான் ஜீ. சுப்பிரமணிய ஐயர் அவர்களின் ஜீவிய சரிதையை எழுதிப் புஸ்தகமாக வெளியிட்டார். அதில் அவரது வாக்கம்பீரத்தையும், தர்க்க சாஸ்திர நுட்பத்தையும், ஆக்ஷேப சமாதான ரீதியில் செல்லும் வாசகத்தின் சுவையையும் நன்குணர லாம். அது முதற் பாகமாகும். அதனை யடுத்த இரண்டாம் பாகம் பிறகு வெளிவரவே யில்லை.

* * *

ஸ்ரீமான் ஜீ. சுப்ரமணிய ஐயரவர்கள் திருக்குற்றலத்தில் கைது செய்யப்பட்டுவிட்டபோது தமிழ் நாடு முழுதும் பெரும் குழப்பமாய் இருந்தது. ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் நடத்திவந்த "இந்தியா" பத்திரிகையின் மீதும் அப்பொழுது ராஜத்துவேஷக்கேஸ்நடைபெற்றுவந்தது. அந்த சமயத்தில் ஸ்ரீமான் பிள்ளையவர்கள் "கேசரி" என்ற தமிழ் வாரப் பத்திரிகை யொன்றை வெளியிட்டார். எங்கும் கலவரமாக இருக்கும் நிலையில் தமக்கும் அபாயம் நேருமென்று கேசரியை ஒரு மாதம் நடத்தி நிறுத்திவிட்டார். அத்துடன் "சுதேச மித்திரன்" காரியாலயத்திலிருந்தும் விலகித் தம் ஊருக்குப் புறப்பட்டுச் சென்றார். அதற்குப் பின்பு அவர் வக்கீலாக இருந்து வந்ததாய் அறிகிறோம். அவர் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டு நின்ற காலத்தில் செய்த தேச சேவை மிகவும் பெரிது. அவரது நூல்களும் பொன்னூல்களாகும். இனி, சங்கரலிங்கம் பிள்ளை அவர்களைக் கவனிப்போம். (தொடரும்.)




(2-வது காலம் 618-ம் பக்கத் தொடர்ச்சி.)

396. கடிகாரயந்திரத்திலே சாவி கொடுத்தால் பெண்டுலம் ஆடும். பெண்டுலம் ஆடினால் சிறிய முள் பெரிய முள் எல்லாம் நகரும். மணியடிக்கும், மணி காண்பிக்கும். மணி காண்பதற்கு முதலிலே கடியாரயந்திரத்துக்கு சாவி கொடுத்துவிடவேண்டும். இது நடந்தால் மற்ற எல்லாம் தாமாக நகரும். அதுபோல் ஒரு பத்திரிகையைப் பிரீதியுடனும் வாசிப்பவர்கள் அப்பத்திரிகையைச் சரிவர நடப்பதற்கும் சாவி கொடுக்க வேண்டும். அந்த சாவி என்னவெனில், ஒவ்வொரு சந்தாதாரும் ஒரு புது சந்தாதாரரைச் சேர்த்துக் கொடுப்பது தான்.

397. எந்த நிகழ்ச்சிக்கும் ஒரு வகை மனோ நிலை அவசியம். அழுகைக்கு உருக்கம் வேண்டும். ஆற்றலுக்கு உறுதிவேண்டும். பகைக்குக் கோபம் வேண்டும். அன்புக்கு 'அரவணைக்கும்' தன்மை வேண்டும். காதலுக்கு நெகிழ்ச்சி வேண்டும்.

# நமது கடை

இம்முறை நமது கடையில் வழக்கம்போல் ஸல்லாபங்கள் நடைபெற்றன. "தன்னைப் பற்றிப் புகழ்ச்சியாய்ப் பேசுகிறவர்களால் ஒரு மனிதனுக்குப் பிரயோஜன மில்லையென்றும், அவனைத் தனக்குக் கீழ்ப்பட்டவனாகக் கொண்டு அவன் தொழிலுக்கான போதனைகள், புத்திமதிகள், அவன் தவறுதல்களை எடுத்துக் காட்டித் திருத்துதல் — முதலியன செய்வோர்களால்தான் பயன் அடைய முடியுமென்றும், இவ்விதம் தனக்கு ஒரு யோசனை சொல்லக் கூடியவர்களைத் தான் வெகு பேர் தேடிச் செல்வார்களென்றும்" விகட ஞான சாஸ்திரி விளம்பினர்.

* * *

தூர இருக்கும் போதுள்ள மதிப்பு சமீபத்தில் இருக்கையில் ஏற்படுவதில்லை யென்றும், ஆனால் சமீபத்தில் சென்றே நிறைவேற்ற வேண்டிய காரியங்களை அவ்விதம் சென்று முடித்த பிறகு தூர எட்டிப்போய் விடுவதுதான் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள வழியென்றும் வஸ்தாத் சுப்பராமன் கூறினர்.

* * *

தாதாசாரியார் தாம் ஓர் ஊருக்குச் சென்றிருக்கையில் அங்கு முதல் நாள் சந்தித்த ஒருவர் பின்பு ஒரு மாதம் வரை எட்டிப் பாராதிருந்து விட்டு, அப்பால் என்றைக்கு வந்தால் காணலாமென்று கார்டு ஒன்று அனுப்பினரென்றும், உள்ளூரில் இருந்துகொண்டே கடிதம் எழுதிக் கேட்கிற அவ்வளவு உருக்கமுள்ள நண்பர்களுக்குத் தாம் பதில் எழுத வேண்டியதில்லை யென்று தீர்மானித்து விட்டுப் பிறகு அவ்வூரை விட்டுப் புறப்பட்டு விட்டதாயும் நவின்றார்.

* * *

எந்த இடம் தனது ஜீவனத்திற்கும் சௌகரியத்திற்கும் ஏற்றதாக இருக்கிறதோ அதைப் பிறருக்குக் காட்டிக் கொடுத்து விடக்கூடாதென்று ஒருவர் கூறினர். எதற்காக அவ்விதம் என்று மற்றொருவர் வினவ, நமது பிழைப்புக்கான இடங்களையும், நமக்கு உபகரிக்கிறவர்களையும் தெரிந்துகொண்டு, அந்த இடத்தில் நம்மை பற்றிக் கேவலமும் பழிப்புமாகப் பேசி, நமது பெயருக்கு அந்த இடத்திலுள்ள கௌரவத்தையும் மதிப்பையும் குழிதோண்டிப் புதைத்துவிடுவார்களென்று முதலில் பேசினவர் அதற்குப் பதில் உரைத்தார்.

* * *

ஒரு பின் பிடிப்பும்,
பின் பலமும் இன்றிக் கற்பைக் கொடுப்பது மகா ஆபத்து. யுவதியாயுள்ள வரையுமே ஆடவரின் ஆசை. அதன் பிறகோ வேறொரு பெண்மீது நாட்டம். இங்கு அந்த யுவதியோ விவாகம் என்கிற பின்பலத்தையும் பிடிப்பையும் பெற்றுப் பிறகு தன் கற்பைத் தந்திருந்தால், இன்னும் விவாகத்தால் குழந்தைகளும் உண்டாயிருந்தால் அது ஆடவனைக் கட்டுப்படுத்தலாம். இந்த ஆயுதமானது இல்லையேல் நடுச்சந்தியில்தான்.

மிஸ் மில்லர் என்ற அமரிக்க தேசத்து நங்கையை இந்தூர் அரசர் தமது மதத்திற்குத் திருப்பிவிவாகம் செய்து கொண்டதற்கு எந்த ஐரோப்பியரும் கூச்சலிடவில்லையே, இவ்விதம் ஓர் ஹிந்து ஸ்திரியை ஒரு இஸ்லாமியராவது, அல்லது ஒரு இஸ்லாமிய நங்கையை ஒரு ஹிந்துவாவது மதம் மாற்றி மணந்திருந்தால் பெரிய கிளர்ச்சி தோன்றியிருக்குமே யென்று மிஸ்டர் ஜான் கேட்டார். "ஐரோப்பியர்கள் ஆத்திரக்காரர்களல்ல, காரியத்தில் கண்ணூன்றியிருப்பவர்கள், நல்லது நடந்தால் ஜாடையாய் மௌனமாக ஒதுங்கிப்போகிறவர்கள் என்று இந்தூர் தாஸன் பதில் பகர்ந்தார்.

* * *

'மகான்'—என்ற பதம் உச்சரிப்புக்குத் தக்கபடி சில தருணங்களில் மூர்க்கனுக்கும், அக்கிரமஸ்தனுக்கும் கூட அவர்களின் கொடுமையை விளக்கும் நோக்குடனும் குறிப்பிடப் படுகிறது என்றார் ஒரு கவிராயர்.

* * *

முதல் மனைவியுடன் வாழ்ந்திருந்த காலையில் சிங்க கர்ஜனை செய்து கொண்டிருந்தவர்கள், அவன் தவறி இரண்டாவது மனைவி வந்ததும் பூனை போல் ஒடுங்கி விடுகிறார்கள்; இது ஒரு விசித்திரம் என்று அந்தோனி முத்து பேசினார். அதைக் கேட்டதும் பிசாசுப் பிள்ளை கோபத்துடன் எழுந்து தம்மைப்பற்றி இப்படித் தாழ்வாகப் பேசிய அந்தோணி முத்துவின் யோக்கியதை தெரியாதா? அவர் லோபியிலும் பரம லோபி. லோபிகளின் சொத்து பாபிகளுக்கே பங்கிடப் படுகிறது; அவ்விதம் திருவிளையாடல் நடத்தும் ஜனமக்களே அவர்களுக்கு உதிக்கின்றனர்; இந்த லோபிகளின் பாபசொத்திலே தர்மஸ்தர்களின் கைக்கு ஒரு காசுகூட எட்டுவதில்லையென்று பழித்துப் பேசினார். இவ்வளவுடன் நமது கடையும் முடிகிறது.

பொன்வண்டு செட்டியார்.

ஒருவர் ஒன்றைச் சொல்லும் போது அவர் எண்ணம் நல்லதாக இருக்கலாம். ஆனால் அதை உபயோகிக்கும் வழியில் சந்தேக விபரீதத்திற்கு இடம் தந்து விடுவதும் கேட்போர் வித்தியாசமாகப் பொருள் கொண்டு விடுவதும், உண்டு. நேரில் எனில் திருத்தி -விடலாம் கடிதம் எழுத்துகளிலே இவ்வி விபரீதம் நேர்ந்தால் பெரிபிளவு தான்! மன்னிப்புக் கேட்பினுங்கூட மனதார மன்னித்தல் அருமை.

---

மிளகாய்ப் பயிருக்குசுமார் 70-ரூபாய்க்குக் குறையாது செலவு செய்தால் ஏக்கருக்கு $2\frac{1}{2}$-பாரம் முதல் 4-பாரம்வரையில் கண்டு முதலாகும். $2\frac{1}{2}$-பாரமானாலும் பாரமானாலும் பாரம் ஒன்றுக்கு 80-ரூபா முதல் 100-ரூபாவரையில் விற்கிறபடியால் குறைந்தது ஏகருக்கு ரூ. $80 + 2\frac{1}{2}$ ரூபாய் 200-க்குக் குறையாமல் அகப்படும் செலவு ரூபா 70-போனாலும் ரூபா 130-மிஞ்சும். (கிருஷிகன்.)




## இல்லற வாழ்க்கையின் — — — — இன்ப ரகசியங்கள் :—

இது "லக்ஷ்மி விலாஸ புத்தக சாலை"ப் பதிப்பு. நான்கு ஆச்சிரமங்களிலும் கிருகஸ்தாச்சிரமமே சிறந்ததென்று முன்னோர் கருதியிருப்பதையும், கிருகஸ்தாச்சிரமத்துக் குரிய பரலோக சாதகமான தர்மார்த்தங்களும், அதிதி சத்காரம் முதலிய நற்செய்கைகளும் நிறைவேறுதற்குப் பத்தினியின் மனவொருமை வேண்டுமென்பதையும், பத்தினியின் மனவொருமையின் பொருட்டு அவளுக்கு இன்பத்தை விளைத்து வாழ்க்கையில் அதிக விருப்பத்தை யுண்டாக்க வேண்டு மென்பதையும், இதற்கு மதனாகமத்தை விட மற்ற நூல்கள் பயன்படாதென்பதையும் யோசிப்பார்களாயின், இந்த "இல்லற வாழ்க்கையின் இன்ப ரகசியங்கள்" என்ற இவ்வினிய நூலை எவரும் ஆர்வத்துடனும் ஏற்றுக்கொள்வார்களென்பதில் தடையில்லை. இந்நூல் ஆங்கிலமொழிபெயர்ப்பன்று. வீண் கதை வளர்ப்புமன்று. கூறியதையே கூறலுமன்று. எல்லாம் சார சங்கிரகம். எல்லாம் தெரிந்து கொள்ள வேண்டிய அரிய குறிப்புகள். மனதைக் கறைப்படுத்தாத பாஷையில் தர்ம மார்க்கமான காம தத்துவ போதனைகள். நல்ல கருத்துகள். மதன சாஸ்திர நுட்பத்தை வெகு தெளிவாய் விளக்குகின்றது. வீண் பிரசங்கம் இந்நூலில் எங்குமே யில்லை. "நந்தி கேஸ்வரர், வாத்சாயனர், கோக்கோக முனிவர் இவர்கள் எழுதிய வட மொழி நூல்களிலிருந்தும், பல மேல் நாட்டு மேதாவிகளின் அபிப்பிராயங்களைக் கொண்டும் இந்நூல் இயற்"றப்பட்டதாக அறிகிறோம். சித்திரப் படங்களுள்ளது. விலை ரூ. 2.

[இதுவும் பிறவும் "ஆநந்த குண போதினி" ஆபீஸில் கிடைக்கும்.]

## கிருஷ்ணு பிராண்ட் உயர்ந்த பன்னீர் :—

இந்தப் பன்னீர் மிக்க உயர்தரமானது. சிறந்த மணமுள்ளது. விசேஷ காலங்களில் உபயோகிக்கவும், ஔஷதங்களில் சேர்க்கவும் ஏற்றது. நம்பிக்கையுள்ளது. வேண்டுவோர் சென்னை பார்க்டவுன் ராசப்ப செட்டித் தெரு, 182-மெஸர்ஸ் எம். துரைசாமி செட்டி அண்டுகோ என்ற விலாஸத்துக்கு எழுதிப் பெறுக.

---

ஸ்ரீரங்கம் கோவில் ஒரு ரூபா லாட்டரிச்சீட்டு மறுபடியும் இரண்டாவது முறையாகத் தொடங்கி யிருக்கிறது. 22—9—28 உடன் முடிவு பெறுமாம். லாட்டரி ஒரு சூதாட்டத்திற்குச் சமம். முந்திய லாட்டரியில் தங்களுக்கு சீட்டு விழாமல் ஏமாறி வருந்தியவர்கள் வெகு பேர்! ஸ்ரீரங்க நாதரின் கைங்கரியம் இப்படி யெல்லாம் செய்தா—ஏமாற நேர்ந்தா நடைபெறவேண்டும்? லாட்டரிச்சீட்டு விழாதவர்கள் தங்கள் ரூபாயை ரங்காதருக்குக் கொடுத்ததாக நினைத்துக் கொள்ளவேண்டும் போலும்!

# சென்றமாதம்

"அழதுக்த இட்டால் ஆபத்துக்கு உதவும்"

நகைப் என்று நம்மவர்கள் பைத்தியம் நகைகள் செய்வதில், சிறு குழந்தைகளுக்கும் அதைப் போடுகிறார்கள். பாட சாலைக்குச் செல்லும் வழியில் அந்த நகைகள் இக்குழந்தைகளுக்கு எமனாக முடிகின்றன. பாட சாலைக்குச் செல்லுகையில் நகைகளின்றி யனுப்புவது உத்தமம். சென்னையில் சென்ற மாதம் குழந்தைகளின் நகைத்திருட்டுகள் பல நடந்தன. 'பொன்னை நினைத்தார் புவிமிசை ஆட்கொல்லி யென்பார்.'

***

"நட்பும் தயையும் கொடையும் பிறவிக் குணம்"

20-லக்ஷம் என்பது போல, நன்கொடை. ஸ்ரீமான் ஸர் அண்ணாமலைச் செட்டியார் சிதம்பரத்தில் ஒரு சர்வ கலா சாலையை ஏற்படுத்த 20-லக்ஷம் ரூபாய் கொடுக்க முன்வந்திருக்கிறார். இக் காலத்தில் "எத்தனை நாள் வாழ்வு" என்று கேட்கும்படியான அற்ப கௌரவங்களுக்குச் செலவிடுவோர் மிகுதியே யன்றி, இவ்வாறான மகத்தான காரியங்கட்கு உதவுவோர் அபூர்வம். கல்விக்களஞ்சியம் தருவோர் மேலுந் தருவோராவர்.

***

**லாட்டரி ஏஜண்டுகளின் மோசம்.**

"எண்ணினேன் கோடி, இழப்பதறியாமல்" என்பதாக, லாட்டரிச் சீட்டில் ஆசை வெறி கொண்டவர்கள் அந்தச் சீட்டுகளை இடையே வாங்கி விற்பவர்களிடம் ரூபாயைக் கொடுத்து 'சீட்டு' பெற்றுக் கொண்டு பின் ஏமாறுவது பரிதாபம்! இவர்களிடம் பணம் பெற்றவர்கள் 'அத்தொகையை 'லாட்டரி' போடப்படும் இடத்திற்கு அனுப்பாமல் தாமே எடுத்துக் கொண்டு மோசம் செய்து விடுகின்றனர். இவ்விதம் ஏமாற்றிய ஒருவருக்குக் கும்பகோணத்தில் 4-மாத கடினகாவலும் 25-ரூபா அபராதமும் கிடைத்தது. லாட்டரிக்குப் பணம் தருவோர் அது போடப்படும் இடத்திற்கே மணியாடர் செய்வதுமேல்.

**மனைவி தாய், ஆகாத பெண் சபிக்கப்பட்ட பெண்.**

"வீட்டு இலக்கணம் தெரியாதவளுக்கு நாட்டு இலக்கணம் தெரிந்து பயனென்ன?" என்றார் வேத நாயகப் பெருமான். லண்டனில் கூடிய பாதிரிகளின் மகா நாட்டில் ஸ்திரீகள் பாதிரிகளாய் மதப் பிரசாரம் செய்யலாமா வென்று எழுந்த வினாவுக்குக் கூடாதென்று மறுக்கப்பட்டது. பாதிரிகளாவதை விட மத போதனை புகட்டும் தாய்மார்களாகவும், மனைவிமார்களாகவும் அமர்ந்து வீட்டுக் குடித்தனமாயிருந்து நாட்டிற்கும் மதத்திற்கும் உழைப்பதே சிலாக்ய மென்றும் தெரிவித்தனர். விவாகத்தின் மூலமாகத்தான் எந்தப் பெண்ணும் உலகுக்கு நன்மை செய்ய முடியும். விவாகமற்ற தனித்த வாழ்க்கை ஒருவித சாபமேயாகும்.

**இந்தூர் மன்னரின் விவாகம்.**

"ஆய்பார்த்த கல்யாணம் போய் பார்த்தால் தெரியும்" என்பது பழமொழி. இந்தூர் அரசர் ஒரு சமர்த்துக் காரர்தான் போலிருக்கிறது. எல்லோரையும் சரி செய்து கொண்டு மிஸ் மில்லரை, ஹிந்து மதத்தில் சேர்ப்பித்து 'சர்மிஷ்டா தேவி' யென்ற பெயருடன் புது உருவினளாக்கி விவாகமும் செய்து கொண்டுவிட்டார். மகா ராஜாவின் காரியங்களை மதிப்பதற் கில்லையாயினும், அவரை நம்பி மணந்த ஸ்ரீமதி சர்மிஷ்டா தேவியிடத்து நாம் மதிப்பு வைத்துப் பாராட்டுகிறோம். இப் பெண்மணியை ஹிந்து மதத்திற் சேர்ப்பித்து ஒரு முன்மாதிரி யுணர்த்திய ஸ்ரீ சங்கராச்சாரியஸ்வாமிகளை எவரும் துதித்துப் போற்றுவர். ராணி ஸ்ரீமதி சர்மிஷ்டா தேவியின் உத்தமக் காதல் என்றும் வாழ்க.

* * *

**லார்ட் கர்ஸனின் வாழ் நாள்.**

"தின்பது கொஞ்சம், சீவனும் நிலையில்லை" என்பதான வாழ்வில் மாஜி இராஜப் பிரதி நிதியான லார்ட் கர்ஸனின் காலம் இருந்ததாய் அவரது சரித்திரத்தை எழுதிய லார்ட் ரொனல்ட்ஷே குறிப்பிடுகிறார். அவர் கால முற்றும் அந்தரங்கப் பிணியாளியாய் பரம வேதனைப் பட்டுக் கொண்டிருந்தாராம். எவ்வளவு வாழ்விலும் ஒரு குறை அண்டி யிருக்கவே செய்கிறது. குமாஸ்தாக்களைக் கொண்டில்லாமல் தாமே தமது சகல கடிதங்களையும் வரைவாராம். விவாகத்திற்கு முன் எளிமையில் சிக்கன வாழ்வில் இருந்தாராம். ஒரு மாதத்தில் 596-கோழிக் குஞ்சு சமைத்ததாகச் சொல்லிய சமயற்காரனை விசாரித்து கடைக்காரனின் மூலம் 290-கோழிக் குஞ்சுகள் வாங்கியதாய்த் தெரிந்து சமையற்காரனை நீக்கி விட்டனராம். மாணவராய் இருக்கையில் நன்கு கற்று முதன்மையான பரிசுகள் பெறுவராம். ஆனால் கீழ்ப்படியாமலும், அசாத்தியமான விஷமமும், உபத்திரவமும் செய்து கொண்டிருந்தாராம். இந்தக் குணங்களையே அவர் இந்திய ராஜப் பிரதிநிதியா யிருக்கையிலும் தோற்றுவித்துக் கொண்டு ஜன ஸமூகத்தின் கண்டனங்களுக்கும் ஆளாயினார். இந்தியாவின் புதிய கிளர்ச்சி லார்ட் கர்ஸனின் தவறுதல்களினின்றும் 1904-ம் வருஷத்தில் உண்டானதாகும். எத்தகையோரும் காலதேவதைக்கு இரையாகி விடுகிறார்கள்.

* * *

**சைமன் கமிஷனின் பிரயாணம்.**

"ஆரியக் கூத்தாடினாலும் காரியத்திற் கண்" என்பதாக, சைமன் கமிஷன் தங்களை ஜனங்கள் எவ்வளவு புறக்கணித்தாலும், அதை வெளியிடாமல், ஜனங்கள் தங்களை எங்கும் வரவேற்றதாகவே சொல்லிக்கொண்டு தங்களின் காரியத்தைக் கவனித்தபடி இந்தியாவின் பல பாகங்களுக்கும் சென்று பார்த்துவிட்டு 31-3-28ல் இங்கிலாந்துக்குக் கப்பலேறி விட்டனர். அவர்கள் ஏற்கெனவே செய்து முடிக்க உத்தேசித்திருக்கிற திட்டங்களைப் பொதுஜன அபிப்பிராயத்தைக் கலந்துகொண்டே செய்ததாகக் காட்ட வேண்டுமென்றுதான் இவ்வளவு பிரயாசையும் படுகிறார்கள். தாங்கள் அவர்களுடன் கலக்கவில்லை யென்று இந்திய ஜனங்கள் நன்கு காட்டி விட்டனர்.

"ஆநந்த குணபோதினி" பிரஸ், நெ. 302 தங்கசாலைத் தெரு, சென்னை.